உ

ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 6 { இரௌத்திரி ௵ புரட்டாசி௴ ௧௳ } பகுதி 3
{ 1920 ௵ செப்டம்பர்௴ 16௳ }

## கடவுள் வணக்கம்.

பூதமுத லாகவே நாதபரி யந்தமும்
பொய்யென் றெனைக் காட்டியென்
போதத்தி னடுவாகி யடியிறு மில்லாத
போதபூ ரணவெளிக்குள்
ஏதுமற நில்லென்று பாயமா வைத்தனை
யெல்லாஞ் செய்வல்ல சித்தா
மின்பவுரு வைத்தந்த வன்னையே நன்னையே
யெளியேன் மறந்துய்வனோ
வேதமுத லானநல் லாகமத் தன்மையை
விளக்குமுட் கண்ணிலார்க்கு
மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும்
வீறுவா தம்புகலும் வாய்
வாதரோ யாளர்க்கு மெட்டாத முக்கணுடை
மாமருந் திற்கமுதமே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெண் ணுமையே

---

என்னுடை யுயிரே யென்னுளத் தறிவே யென்னுடையன்பெ னுநெறியாய்
தன்னன்முக் கனிதேன் கண்டமிர் தென்னக் கலந்தெனை மேவிடக்கருணை
மன்னிய வுறவே யுன்னைநான் பிரியா வண்ணமென் மனமெனுங் கருவி
தன்னது வழியற் றென்னுழைக் கிடப்பத தன்னருள் வரமது வேண்டும்.

கற்புறு சிந்தை மாதர் கணவனை யன்றி வேறோ
ரிற்புறத் தவரை நாடார் நாங்களு மின்ப வாழ்வும்
தற்பெறி யாக நல்குந் தலைவநின் னலதோர் தெய்வம்
பொற்புறக் கருதோங் கண்டாய் பூரணா னந்த வாழ்வே.

# ஆனந்தபோதினி

இரௌத்திரி ௵ புரட்டாசி ௴ ௧௨

## தருமம்

தருமம் என்ற பதத்திற்கு அறம், இயல்பு, நீதி, பிரமாணம் வேதம் என்று பலபொருள்க ளிருப்பினும் இங்கு அறம் என்றே நாம் பொருள் கொள்ளவேண்டும். தா என்றால் கொடு, ஈ என்று பொருள். யாவற்றையும் கொடுக்கும், அதாவது படைத்தளிக்கும் பிரமனுக்குத் 'தா' என்று பெயர் கூறப்பட்டிருக்கிறது. ஆதலின் கைம்மாறுகருதாது கொடுக்கப்படுவதே தருமம் எனப்படும்.

தருமத்திற்கு மூலகாரணம் கருணை அல்லது இரக்கமேயாகும். தருமம் முப்பத்திரண்டு விதமென்று கூறப்பட்டிருக்கிறது. பொதுவாய்க் கூறும்பட்சத்தில் ஒருவர் ஒருபொருளை வேண்டி அதுகிடைக்காது வருந்தும்போது, அப்பொருளை யவர்களுக்குக்கொடுத்து அவர்கள் துன்பத்தை நீக்குதலே தருமம் எனலாம். இத்தருமம் இரண்டு விதமாகச் செய்யப்படுகிறது.

**முதலாவது**—சந்தர்ப்பம் நேர்ந்தபோது செய்யும்தருமம். எவ்வாறெனில் ஒருவன் நம்மைக்கண்டு "அய்யா காலையிலிருந்து சாப்பாடின்றி வருந்துகிறேன்" என்கிறான். அவனுக்குடனே ஆகாரமளித்து அவனது பசிப்பிணியை நிவர்த்திப்பது.

இதைச் செய்வதிலும் இரண்டுவிதங்களுண்டு. எவ்வாறெனில் ஒன்று ஒருவர் நம்மைக் கெஞ்சிக்கேட்ட பிறகே உதவுவது. மற்றொன்று ஒருவன் பசியோடிருக்கிறான், அல்லது ஆடையின்றி அவதிப்படுகிறான் என்றுகேள்விப்பட்டதே அல்லது கண்டதாலேயே நாமே அவன் வேண்டுவதை யுதவி அவன் துன்பத்தை யொழித்தலாகும்.

**இரண்டாவது**-பலர்க்கு உபகாரமான ஒரு தருமத்தை நாமே உத்தேசித்துச்செய்தல். விசேஷமாக இத்தகைய தருமம் நிலையானதாக விருப்பது. இது காலம் இடம் அறிந்து செய்யத்தக்கதாகும். மேலும் பெரும்பாலும் செல்வவந்தர்களே இத்தகைய தருமத்தைச்செய்வார்கள். பாதையில் பிரயாணிகள் தங்கச் சத்திரங்

கட்டிவைத்தல், குளம்தோண்டிவைத்தல், கோயிலில்லாத ஊரில் கோயில் கட்டிவைத்தல், தக்க விடத்தில் சுமைதாங்கி யமைத்தல் இவை போன்றவை நிலையான தருமங்களாகும்.

அப்போதைக்கப்போது பலருக்குதவும் வண்ணம் செய்யும் தருமங்களுமுண்டு. அவைவேனிற்காலத்திலும், திருவிழாக்கள் முதலியன நடக்கும்போதும் தண்ணீர்ப் பந்தல் வைத்தல், சிற்றுண்டியளித்தல், ஏழைகளுக்கு அன்னமாதியளித்தல் முதலியவைகளாம்.

தருமத்தின் அளவு அதற்காகச் செலவிடும் பொருளின் அளவைப்பொருந்தியதன்றும்; காலத்தையும், தருமம் பெற்றவர் அடையும் சந்தோஷத்தையும் பொருந்தியதாகும். ஒரு இலக்ஷாதிகாரி தருமத்திற்காக அளிக்கும் ஆயிரம் ரூபாயைவிட, தினம் இரண்டணா சம்பாதிக்கும் ஏழையளிக்கும் ஒரு அணா எவ்வளவோ பெரியதருமமாகக் கடவுளால் மதிக்கப்படும். இதுவுமன்றித் தருமம் எவ்வளவு அன்போடளிக்கப் படுகிறதோ அவ்வளவும் உயர்வானதாக மதிக்கப்படும். அவ்வாறே காலத்தை யனுசரித்துச்செய்யும் உதவியும்.

சேக்கிழாருடைய தந்தையானவர் சோழராஜனிடம் வித்துவானாகவும் மந்திரியாகவு மிருந்தபோது பாண்டிய அரசன் தன்னிடமுள்ள வித்துவான்களே சிறந்தவர்களென்று நிரூபிக்கவேண்டி "தங்கள் சபைக்கண்ணுள்ள வித்வான்களைக்கேட்டு உலகத்திலும் பெரிய பொருள் எதுவென அறிவிக்க வேண்டும்" என்று சோழராஜர்க்கு ஒருநிருபம் விடுத்தனன். சோழராஜன் தன்சபையிலுள்ள வித்வான்களிடம் அக்கேள்வியைக் கேட்டான். யாவரும் "அப்பா, யாவற்றையும் தன்னில் அடக்கித் தாங்கிக்கொண்டிருக்கும் உலகினும் பெரியது யாதுளதெனத் திகைத்து வாளா விருந்தனர். அரசன் தமது வித்வான்களின் தலைவரான சேக்கிழாரின் தந்தையை நோக்கி "நமது வித்வக் கழகத்தின் தலைமை பூண்டிருக்கும் தாமே யிதற்கு விடையளித்தல் வேண்டும். இன்றேல் யாவர்க்கும் அவமானம் நேரும். நாளைவந்து விடையளி மின்" என்றனன்.

அன்றுமாலை தம் வளவிற்கு வந்த சேக்கிழாரின் தந்தை ஊணுறக்கங்கொள்ளற் கியையாராகி மனம் புண்பட்டு உளம் பதைத்துத் துயர்க்கடலி லாழ்ந்து "ஓ! சங்கப்புலவர்தந் தலைமை பூண்ட தெய்வப்புலவராம் பரமபதியே! நந்தமிழ்த் தாய்க்குந் தாயாகிய முக்கணெம்மானே! முனிவரேறே! மூவாமுதல்வ! செஞ்சடைச் செல்வ! மஞ்சமர் மலைமகள் நெஞ்சமர் நாயக! அஞ்சலென்றென்னை யாண்டருள் புரியநின் னிணையடியன்றி யோர் துணைவலி யறியேன்" என்று சிவபிரானைத் துதித்துக்கொண் டிருந்தார். அச்சமயம் சேக்கிழார் சென்று தமது தந்தையைத்தேற்றிக் காரண மென்னை? சிறியேற் கருளவேண்டு மென்று வற்புறுத்திக்கேட்டபின் அவர் "குழந்தாய்!

அது உன்னாலாகுங்காரிய மன்று என வியம்பி, விஷயம் இவ்வாறு என்று கூறினர். அதைக்கேட்ட சேக்கிழார் "அப்பா! இதற்கா தாங்கள் இவ்வாறு வருந்துவது! தாங்கள் எழுந்து சந்தோஷமாக அசனமருந்துங்கள்; சிறியேன் அதற்கு விடையெழுதித் தருகிறேன்" என்றனர். தந்தை அவர் கூறிய தைரியத்திற்கு மகிழ்ந்து ஊண் அருந்தாதிருப்பதில் பயனென்னையென்று போசனமருந்தினர். மறுநாள் சேக்கிழார் தமது தந்தை அரசன் சபைக்கேகும் சமயம் ஒரு ஓலையில்

"காலத்தாற் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது" என்ற குறள் வெண்பாவை வரைந்து தம் தந்தையார் கரத்தளித்தனர்.

இதனால் தக்க சமயத்தில் செய்யும் உதவி மிகப்பெரியதாக மதிக்கப்படுவது காண்க.

சாதாரணமாக உலகவழக்கின்படி ஒருவன் தனது வருவாயில் ஓர் பாகத்தைத் தருமத்தில் உபயோகிக்க வேண்டும் என்பது விதி. ஆனால் அளவுபாராமல் தேகி என்று யார் எதைக்கேட்ட போதினும் பூரண மனத்திருப்தியோ டளிப்போர்களும் நம்புண்ணிய பூமியில் இருந்துளார். இவர்களே வள்ளல்கள் எனப்படுவோர்.

பாண்டவர் காலத்தில் ஒருவன் கிருஷ்ண பகவானிடஞ்சென்று "ஓ பகவானே! துரியோதன மகாராஜன் ஏகசக்ராதிபதியா யரசாள்பவன்; குபேரனையொத்த செல்வவான். அவ்வாறிருக்க அவனால் ஒரு சிற்றரசனுக்கப்பட்ட அங்கர்கோனாகிய கர்ணனைக்கொடையிற் சிறந்தவனென்று கூறத்தகுமோ?" என்று கேட்டான். கண்ணன் கீழ்க் கூறப்படும் திருஷ்டாந்த மூலமாகக் கர்ணனே கொடையிற் சிறந்தவன் என நிரூபித்தனர். அவ்விஷயமாவது:—

ஒருநாள் ஒரு ஏழைப்பிராம்மணன் அரவக்கொடியோனிடம் வந்து "வேந்தே! என் புத்திரனுக்கு உபநயனம் நடக்க ஏற்பாடு செய்திருக்கிறேன், அதற்காகப் பத்துவண்டி உலர்ந்த எரிகரும்பு உதவவேண்டும்" என்று இரந்தனன். அரசன் அவ்வாறே யளிப்பதாக வாக்களித்தபோது மறையோன், "புரவலரேறே! உபநயனம் நடக்கும் முன்தினம் வந்து அதைப் பெற்றுக்கொள்கிறேன்" என்று சென்றான்.

அவ்வேதியன் அவ்வாறே இருபது நாட்கள் கழித்து ஒருநாள் வந்துவாக்களித்தபடி யளிக்கவேண்டுமென்று வணங்காமுடியோனைக்கேட்டான். அச்சமயம் ஒருவாரமாக விடாமழையாயிருந்ததால் சுயோதனன் "இச்சமயம் உலர்ந்தவிறகு கிடைப்பதரிது. மழைநின்றபின் வம்மின்" எனக்கழறினன். அந்தணன் "ஐயோ! நாளைக்கு உபநயனமாயிற்றே, அரசனை நம்பியிருந்தேனே, சமிதையின்றிச் சமையல் நடவாதே" என்று புலம்பிக்கொண்டே வீதியிற்செல்லும்போது

முன்பு கண்ணனைக் கொடையைப்பற்றி கேள்விகேட்ட மனிதன் விப்பிரனைக்கண்டு சங்கதியறிந்து, கோபாலன் கூறியபடி "அய்யா வேதியரே! கர்ணமகாராஜன் கொடையிற் சிறந்தவனென்கிறார்களே, தாங்கள் அவரிடம்செல்லின் தமது குறைநீங்கும்" என்றியம்பினன். பிராம்மணன் அவ்வாறேசென்று அங்கர்கோனையணுகித் தன் ஆபத்தைக்கூறினன். தருமர் தமையன் உடனே ஏவலாட்களை யழைத்து "நமது அரண்மனையின் பின்பாகத்துக் கூரையைப் பிரித்து அதிலுள்ள உத்தரங்கள் கழிகள் முதலிய யாவற்றையும் எடுத்துப் பத்து வண்டிகளில் நிரப்பத்தக்கவைகளை இவ்வந்தணர் அகத்திற்கொண்டு போய்த் தட்சணம் சேருங்கள்" என்று கட்டளை யிட்டான்.

சிபிச்சக்கிரவர்த்தி புறாவிற்காகச் சிவகாருண்ணியத்தால் தம் தேகத்திலுள்ள மாமிசத்தை யறுத்தளித்தார். குமணச்சக்ரவர்த்தி புலவர்க்குப் பணத்திற்குப் பதில் தமது சிரசைவெட்டிக் கொண்டுபோய், தம் தம்பியிடமளித்து அதற்காக அவன் பரிசாகத் தருவதாகக் கூறியிருக்கும் தொகையைப் பெற்றுக் கொள்ளும்படி கூறினார். இத்தகைய அபூர்வக் கொடையாளிகள் நமது புண்ணிய பூமியில் ஜனித்திருந்தார்கள். உலகில் வேறெங்கும் இத்தகையோர் ஒருவரேனு மிருந்ததாகத் தெரியவில்லை.

இவ்வாற்றால் ஆபத்தில் ஒருவர்க்கு வேண்டியதை யுதவுவதே தருமமாகும். இத்தகைய தருமம் உத்தமம், மத்திமம், அதமம் என மூவகைப்படும்.

1-வது. ஜாதி மதபேதம் பாராது, கருணை யொன்றினாலேயே தூண்டப்பட்டு, நமது பொருளையளிக்கிறோம் என்று கருதாமல், ஒரு ஜீவனுடைய துன்பநிவர்த்தியை மட்டும் கருதி உதவிபுரிந்து, அதைப் பிறர் அறியவேண்டுமென்று கருதாது இருப்பதே உத்தம தருமமாகும்.

2-வது. தன்மதத்தினர் தன் இனத்தினர் மட்டுக்கும் செய்ய வேண்டுமென்றெண்ணிச்செய்வதும், இப்போது தருமம்செய்தால் இது நமக்கும் நம்மக்களுக்கும் நன்மையளிக்கும் என்று பிரதிபலன் கோரிச்செய்வதும், என் வயிற்றுவலி நீங்கின் நூறுபண்டாரங்களுக்கு அமுதளிப்பேன் என்று கூறி நோய் நீங்கியபின் அப்படியே செய்தலும் ஆகிய இவையாவும் மத்திமதானம் எனப்படும்.

3-வது. உலகப் புகழ்ச்சிக்கும், பெருமைக்கும், பலர்காணும் போதுமட்டும் செய்தல் அதமதானமாம்.

•தருமம் செய்ய நாம் செல்வவந்த னல்லவே என்று கருதலாகாது. உலகில் ஒவ்வொருவர்க்கும் தம்மைவிடச் செல்வவந்தரும், தம்மைவிட ஏழைகளுமுண்டு. தத்தம் சத்திக்கேற்றவரையில் ஒவ்வொருவரும் தருமம் புரிய வழியுண்டு. அவ்வாறே புரியவேண்டும்.

நமது மதத்தில் கூறியிருப்பதுபோல் மகம்மதியமதத்திலும் தருமம் ஆண்டவன் அருளையளிக்கத்தக்க அவ்வளவு சிறந்ததென்று கூறப் பட்டிருக்கிறது. அந்தோ இக்காலத்தில் நம் நாட்டில் பெருமைக் கும் பட்டப்பெயர்களுக்கும் இச்சைவைத்து தருமம் செய்வோரே அதிகமாக விருக்கக் காணலாம். இத்தகையோர் கயவரேயாவர். இவர்கள் செய்யும் போலித்தருமத்தால் பாபத்தையே பலனாக அடைவர்கள். முடிவில் தருமசிந்தனை யில்லாத ஜன்மம் மானிட ஜன்ம மாகாது. தான் விரும்பியதைச் செய்து முடிப்பதே மானிட சுபாவமாதலின் மூதாட்டியாகிய ஔவைப் பிராட்டியார். "அறஞ் செய விரும்பு" என்றார். ஆதலின் ஒவ்வொருவரும் சீவகாருண்யம் பொருந்தி தங்கள் தங்களால் இயன்றவரை தருமத்தை ஈசுரார்ப்பண மாகச் செய்தல் வேண்டும்.

ஓம் தத்ஸத்.

---

## பொய்

ஆம், அது தான் உன் பெயர்! அப்பெயர்தா னுனக்குச் சரி! உன் பெயரே பொய்யாக விருக்கும் பொழுது நீ எதைத் தான் "பொய்" என்று சொல்ல வருவாய்! சில விஷயங்களை நீ "பொய்" என்று சொல்லுவதெல் லாம் பொய்யாகி விடுகிறதினாலேயே உனக்கு அப் பெயர் இடப்பட்டது போலும்! ஆம், உன் உடல், உயிர், பெயர் யாவும் பொய்! ஆ! உன் வல் லமை மிகப் பெரிது! உன் வல்லமையை அளவிட்டுக் கூறுவது முடியாத காரியம். "இச்சை" என்பவன் உனக்கு முன் பிறந்தவனாயினும் நீ அவனை விட அதிகமான வல்லமையுள்ளவன்! உன்னுடைய சமயோசித யுக்தியும், சூக்ஷ்ம அறிவும் யாவராலும் அதிசயிக்கத் தக்கன. சமயத்தில் "சத்திய" னெனப் பெயரெடுப்பவன் நீயே! ஆ? உன்னால் ஜயிக்கப்படாத மானி டன், இவ்வுலகில் நூற்றுக்கு ஒருவன் உண்டு என்பது பத்தில் ஒன்பது பங் குக்கும் நிச்சயமில்லை. உன் மூத்த தமயனே இச்சை; அவனிலும் இளைய வன் நீ, உனக்குப் பின் பிறந்தவன் பயம், அவனிலும் இளையவன் துக்கம், அவனிலும் இளையவன் சோம்பல், அவனிலும் இளையவன் வறுமை, அவ னிலும் இளையவன் அவதூறு, அவனிலும் இளையவன் அரும்பிணி, அவ னிலும் இளையவன் நரகம். ஆ! எவ்வளவு சந்தோஷகரமான நாமதேயங் கள்! சத்தியத்தைக் கைக்கொண்ட மனிதனொருவன், உங்களின் பெயர் களைச் செவியுற்ற அதே நிமிஷம் இடியோசை கேட்ட நாகம் போல நடு நடுங்குவான் என்பதில் சிறிதும் ஐயமில்லை. சுகத்தை யடைய விரும்புகிற வன் உன் அண்ணனை விரும்புகிறான், உடனே உன் அண்ணன் உன்னை விரும்புகிறான்; நீ உன் அண்ணனை விரும்பியவனை விரும்பி, சிறிது சந் தோஷத்துடன் அலக்கழித்து, படிப் படியாய் உன் தம்பிகளையும் விசா ரிக்கச் செய்து, எல்லாரிலும் இளையவனிடம் ஒப்புவித்துவிடுகிறாய்! மனித சரீரம் பெற்ற பலரிடத்தில் இல்லாத இச்சகோதர ஒற்றுமை, மாயா சரீ ரம் பெற்ற உங்களிடத்தில் அமைந்திருப்பது பின்னும் அதிசயிக்கத்தக்கது! உங்களில் ஒருவருடைய சரித்திரத்தையும் எழுதுவ தென்றால் தனித்தனி

ஒவ்வொரு பாரதமாகு மென்றால், எல்லாரிலும் மிகுந்த அற்புதச் செயல்களைச் செய்து வருகிற உன்னுடைய வல்லமைகள் முழுமையும், இவ்வானந்த போதினியின் மூலமாக வெளியிட முடியாதாயினும் சில விஷயங்களை மட்டும் சுருக்கமாகச் சொல்லுகிறோம். "இரகசியங்கள் வெளியாகின்றன" என்று வருத்த மடையாமல், "நமது பராக்கிரமங்கள் கூறப்படுகின்றன" என்று சந்தோஷப் படுவாயாக!

ஆ! எத்தனை குடும்பங்கள் உன்னால் சிதறி யழிக்கப்பட்டன! எத்தனை மனிதர்கள் உன்னால் துக்கப் பட்டனர்!

பொய்யே! பொய்யே! பொருந்து! நின் மாட்சி
புகலவு முனைவிட் டகலவு மெளிதோ?
மானிடர் தம்மை மாநரகாழ்த்தப்
பூதலத்துதித்துப் புகழோங்கி வாழும் - பொய்யே

ஆ! எத்தனை வித்துவான்களிடத்திற் குடி கொண்டு, உலோபியைக் "கர்ண" னென்றும், குரூபியை "மன்மத" னென்றும், கூரை வீட்டை "மாளிகை" என்றும், யானையையே பார்த்திராத ஒரு செல்வந்தனை "யானை கட்டி வாழ்கின்ற மன்னன்" என்றும் சொல்லி வருகிறாய்!

ஆ! B. A. B. L. M. A. B. L. என்ற பட்டங்களை உடையவர்களும், மிகுந்த யோக்கியதா பத்திரம் பெற்றவர்களுமான எத்தனை வக்கீல்களின் [illegible]வில் நடனஞ்செய்து, என்? அப்படி இருந்திருக்கப்படாதோ? என்? இப்படி இருந்திருக்கப்படாதோ? என்று கொலையாளியை நிரபராதி யெனவும், யோக்கியனைக் கள்ள னெனவும் ருசுப்படுத்த வாதித்து, எத்தனை நீதவான்களின் சித்தத்தைக் கலங்கவைத்து விடுகிறாய்!

ஆ! எத்தனை அர்ச்சாபீசுகளின் மானேஜரிடத்தில் சிநேகஞ் செய்து (வந்து அலைகிறவர்களுடைய நஷ்டத்தை மானேஜர் அறிந்து சிறிது வருத்தப்படினும்) அவருடைய சிநேகனாகிய நீ எவ்வளவு கெம்பீரமாய் "நாளை சாயந்திரம் அவசியம் தந்து விடுகிறேன்" என்று சொல்லி யனுப்பி விடுகிறாய்!

ஆ! எத்தனை ஜட்கா வண்டிக்காரர்களிடத்திலும், ரிக்ஷா வண்டிக்காரர்களிடத்திலும் குடிகொண்டு, வண்டியிலேறும் ஜனங்களை குறிப்பிட்ட விடத்தில் இறக்கி "என்ன ஐயா! இரண்டணாவைக் குறைத்துக் கொடுக்கிறீர்" என்று நடுரோட்டில் பலத்த சப்தம் போடச்செய்து, மரியாதைக் கஞ்சி அவர்கள் கொடுக்கும் பணத்தை வாங்கிக் கொடுத்து வருகிறாய்!

ஆ! எத்தனை பிராமணர்கள் மந்திரஞ் சொல்லிக்கொண் டிருக்குஞ் சமயத்தில் ஏதாவது சிறிது மறந்திருந்தால், இல்லாததும் பொல்லாததுமான உன்னை அவ்விடத்தில் சிறிது வைத்து மொண மொணேச் சாரணம் செய்து விடுகின்றனர்! தக்க சமயத்தில் அவர்களைக் காப்பாற்றும் சக்தி உன்னிடத்தி லமைந்திருப்பது பெரிதும் வியக்கத் தக்கது!

ஆ! மேல் மூடியிட்டு, முத்திரை வைத்த எத்தனை மருந்துப் புட்டிகளுக்குள் நுழைந்து கொண்டு, எத்தனை நாள்களாகினும் ஜீவித்திருந்து

விலை கொடுத்து வாங்கிய வியாதியஸ்தரின் கஷ்டங்களை அதிகமாகச் செய்து ஆனந்தக் கூத்தாடுகிறாய் !

ஆ ! எத்தனை விளம்பரங்களில் புறாக்களைப் பிடிக்கும் வலை போன்று வியாபித்து, பார்ப்பவர் கண்களுக்குத் தென்படாமல் மறைந்துகொண்டிருந்து பாமரரை யேமாற்றுகிறாய் !

ஆ ! எத்தனை ஆசாரிப் பட்டறைகளை வாசஸ்தலமாகக் கொண்டு, நகை செய்யக் கொடுத்துப் பல தடவை நடந்து நடந்து, சலித்துப்போன மனிதர்களைப் பின்னும், "இன்றுவா" "நாளைவா" "காலைவா" "மாலைவா" என்று ஆச்சாரி மார்களின் வாய்கள் கூடச் சலித்துப்போகாமல் சொல்லச் செய்கிறாய் !

ஆ ! வியாபாரிகளுக்கெல்லாம் ராஜ வியாபாரிகளான எத்தனை ஜவுளிக் கடைக்காரர்களிடத்திற் குடி கொண்டு, எத்தனை பட்டியல்களாக மாறி விளங்கிக்கொண் டிருக்கிறாய் ! ஆம்; ஒரே ஒரு வேஷ்டியைக் கொடுத்து "அது கோடி வேஷ்டி" என்று சொல்லி யனுப்பும் வழக்கத்தையும் கற்றுக் கொடுத்தா யல்லவா !

ஆ! எத்தனை பெண்களில் ஐக்கியமாகி ஆடவர்களை ஆட்டாமலாட்டி அலக்கழித்து, துன்புறுத்துகிறாய்! ஆம்; இதைவிட இரு பெண்டு ஆட்டிகளுடைய ஆடவர்களாயின், உன் சந்தோஷத்துக்கு அளவே யில்லை யன்றோ !

ஆ ! எத்தனை சோம்பேறிகளை வயிற்றுப் பிழைப்புக்காகச் சாமியார் வேடந் தரிக்கச் செய்து, உலகில் உலவ விடுத்து, உண்மையான சன்னியாசிகளையும் சந்தேகிக்கச் செய்து மாந்தர்களின் புத்தியை சபலப் படுத்தி விடுகிறாய் !

ஆ ! எத்தனை கிழவிகளிடத்திற் குடி கொண்டு " ஆயிரந் தடவை பொய்யைச் சொல்லி ஒரு கலியாணத்தை முடியுங்கள் " என்று சொல்ல வைத்து, அவ்விதமே சில கலியாணங்களும் நடத்தி வைத்து, "சுபகாரியங்களும் நான் இல்லாமல் நடவாது " என்று நினைத்துப் பேரானந்த மடைகிறாய் !

ஆ ! எத்தனை கிறிஸ்தவர்களை அன்போடு நேசித்து, " கிறிஸ்து மதமல்லாத மற்ற மதங்களெல்லாம் பொய். கிறிஸ்துவை விசுவாசியாத பாமரர்கள் பாவத்தைச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறார்கள்" என்றும், "இரண்டாந்தடவை இவ்வுலகத்துக்கு ஏசுராஜா வந்து இரண்டாயிர வருடகாலமாக மரித்து மண்ணுக் கிரையாகிப் போன நம் இருபத்தோராவது பாட்டன் முதல் எல்லோரையும் எழுப்பி நியாயந் தீர்க்குஞ் சமயத்தில் கிறிஸ்துவை விசுவாசியாத மனிதர்கள் நரகத்தில் தள்ளப் படுவார்கள் " என்று அவர்கள் கூறுவது போதாமல், இம்மதத்தில் சேர்ந்தால் உனக்கு உயர்பதவிகிடைக்கும், கௌரவம் கிடைக்கும், துரைமார் உனக்குச் சமமரியாதை யளிப்பார்கள், நீ சீமானுவாய் என்று பொய்யாசைகளைக் காட்டி வாய்ப்பறை யடிக்கச்செய்து, மார்க்க விஷயங்களிலும் நீபிரவேசித்திருப்பதாக நினைத்து, உனக்கு நிகர் ஒருவரு மில்லை யென்று மமதையடைகிறாய்!

ஆ! உன்னை ஏற்றுக் கொள்ளாத அரிச்சந்திரனிடத்தில் நீ வசிக்கப் பிரியங் கொண்டு, விஸ்வாமித்திர மஹரிஷியிடம் "அஹங்காரம்" என்னும் நண்பனை விடுத்துத் தூண்டுதல் செய்தாய். அவர் உனக்காகப் பரிந்து பிரயாசைப்பட்டதினிமித்தம், தமது ஒப்புயர்வற்ற தபோபலத்திலரைப் பங்கு இழந்து விடச்செய்தாய்.

ஆ! இறந்தான் அஸ்வத்தாமா" என்று தருமர் சொல்லாமலுன்னைச் சொன்னதற்காக உன் கடைசி சதோதரனைத் தரிசிக்கச் செய்தாய்.

உன்னையே நம்பி, நீயே கதியென்று சதா காலமும் உழன்று, மதி மோசம் போன மானிடர்களுக்கு உன் இளைய சகோதரனால், என்ன துன்பம் நேரிடுமோ என்று பெரிதும் யோசிக்க வேண்டியதாயிருக்கிறது.

ஆ! "பொய்" என்னும் புண்ணியனே! இவை யாவும் நீ செய்ய வேண்டிய வேலைகளா? என்று சிந்திக்கும் பக்ஷத்தில், நீ உன் செய்கைகளில் சிறிதேனும் வெறுப்படையாதிருப்பதும், தைரியமான அட்டகாசத்துடன் உலகத்தின் பல விடங்களில் சஞ்சரித்து வரும் அற்புதச் செய்கையும், துணிகரமான வீரச்செயல்களும் "வேலையல்ல விளையாட்டு" என்று கூறுவதுபோ லிருக்கிறது. ஆம்; உலகில் நீ விளையாட்டாக விளையாடித் திடச்சித்த மற்ற பலரை, உன் மயக்கத்தால் மயக்கி உன் சகோதரனிடத்தில் ஒப்புவிக்கிறாயே!

திடசித்தத்தோடு உன் பெயரைக்கேட்டதே உன்னை வெறுக்கும் மனிதனும், தன் உள்ளத்திலேயே கடவுள் இருக்கிறார் என்ற உண்மையை மறவாத உத்தமனும் உன்னைச் சட்டைசெய்யார்கள். அவர்களிடம் உன் சபம் ஓங்காது. ஆகையால் சகோதர சகோதரிகளே "நாமனைவரும் அவ்வாறே யொழுக வேண்டும், சத்தியமே நேசிக்கப்பட வேண்டும், பொய்வெறுக்கப்படவேண்டும். நன்மை விளைய வேண்டும். தீமை யழிய வேண்டும். மிகச் சொற்பமான இடங்களில் மட்டும் அரசு செலுத்தி வருகிற திருப்தி, உண்மை, மகிழ்ச்சி, சுகம், ஊக்கம், செல்வம், புகழ், ஆரோக்கியம், மோக்ஷம் என்ற சகோதரர்கள் இவ்வுலக முழுதும் ஆள வேண்டும்." என்று எங்கும் நிறைந்த பரம்பொருளைப் பிரார்த்திப்போமாக.

கதையை யல்ல கருத்தை உணருங்கள்.

தூற்றத்தை யல்ல தூணத்தைக் கொள்ளுங்கள்.

தான்கெடினுந் தக்கார்க்கே டெண்ணற்கத் தன்னுடம்பின்
ஊன்கெடினும் உண்ணார்கைத் துண்ணற்க—வான்கவிந்த
வையகம் எல்லாம் பெறினும் உரையற்க
பொய்யோ டிடைமிடைந்த சொல்.

K. A. P. விஸ்வநாதன்,
நெ. 33, தஞ்சாவூர் ரோட், திருச்சிராப்பள்ளி.

---

## தாயுமானவர் சரிதை

நமது ஆனந்தனில் கடவுள் வணக்கம் எனும் தலைப்பின் கீழ் வரையப் பட்டிருக்கும் பாடல்களெல்லாம் தாயுமானவரால் அருளப் பட்டனவே. ஆதலின் தாயுமானவருடைய சரிதையை யாம் சிறிதளவு வரையவேண்டு வது நமது கடமையாயிற்று.

வேதாரணியம் எனப்படும் திருமறைக்காட்டில் 16 - வது நூற் றுண்டில் கேடிலியப்பபிள்ளை எனும் சைவவேளாளர் ஒருவரிருந் தார். அவர், ஈவு, இரக்கம், பூததயை, அருள் அடக்கம் முதலிய சகல குணங்களிலும் சிறந்து விளங்கா நின்றனர். கேடிலியப்ப பிள்ளை அந்நகரத் தின் கண் சிறப்பெய்திய சிவாலயத்தின் மேல்விசாரணைக் கர்த்தாராக நிய மிக்கப் பெற்றார். பிள்ளையவாள் விசாரணைக் கர்த்தரானதே, சிவாலய விஷயங்கள் காலக்கிரமப்படி ஒழுங்காய் நிறைவேறிவந்தன. கேடிலியப்பப் பிள்ளை தமது ஏககுமாரனைத், தமது தமையனுக்குச் சுவீகாரம் செய்து கொடுத்தார். பிறகு அவர் தமக்குச் சந்ததி உண்டாக்கக் கடவுளைத் தினே தினே பிரார்த்திப்பார். கேடிலியப்பபிள்ளையின் நற்குணங்களை அக்காலத் தில் திருச்சியை அரசாண்டுவந்த விசயரகுநாத சொக்கலிங்கநாயகர் கேள் விப்பட்டு, அவரைத் தமதரண்மனைக்கு வருவித்து, தமது அரண்மனையில் பெரிய சம்பிரதி (Chief Accountant) எனும் உத்தியோகத்தைக் கொடுத் தார். பிள்ளையவர்கள் பிறகு தமது குடும்பத்தைத் திருச்சிராபள்ளிக்கே அழைத்து வந்தனர். தற்காலத்தில் பலர் தெய்வ பக்தியில் உழன்று கிடப் பவர்போல் நடிக்கின்றனர்; தனம் சிறிதளவு கிடைத்தால்,தெய்வபக்தி ஓடி விடுகின்றது. பிறகு பணத்தின்மேல்தான் பக்தி. ஆனால் பிள்ளையவர்க ளோவெனில் திரிசிரமலை நாதரான தாயுமானவரைத் தினம் பக்தியோடு தரிசித்து வந்தார். தாயுமானவர் அருளினால் சில வருடங்களில், அவருக் குத் திருக்குமரனொருவன்பிறந்தான். தாயுமானவர் அருந்தவப் பேற்றினால் ஜனித்த குழந்தை யாதலின், அக்குழந்தைக்கு 'தாயுமானவன்'' எனும் பெயர் வைக்கப்பட்டது. இவரே நமது தாயுமானசுவாமிகள்.

கேடிலியப்பப் பிள்ளையின் திருமகனும் தாயுமானவர் உரியவயதில் நல்லாசிரியரிடம் தென்மொழி, வடமொழி இரண்டையும், சிறந்த நூற்க ளையும், இலக்கண இலக்கியங்களோடு கற்று, சாத்திர ஆராய்ச்சியி லும் சிறந்தவரெனப் புகழப்பட்டார். ஞான நூல்களையும் நன்றாய் ஆராய் ந்தறிந்து, எல்லோராலும் சாலவும் மெச்சப்பட்டார். அவ்வணமிருக் கையில், தாயுமான வருடைய பிதா கேடிலியப்பபிள்ளையவர்கள் சிவலோ கப்பிராப்தி யடைந்தார். பிதாவிற்குச் செய்யவேண்டிய 'ஈமக்கடன்களை யெல்லாம் தாயுமானவர் செவ்வனே செய்துமுடித்தார். விசயரகுநாதசொ க்கலிங்க நாயகர் தாயுமானவரை ஒருநாள் இராஜமாளிகைக்கு வரும்படி வேண்ட, அவர் சென்று அரசனுடன் சாதுரியமாகப் பேசினார். அரசன் அவரது கூரிய புத்தியைக்கண்டு மனமகிழ்வெய்தி, பெரிய சம்பிரதி எனும் உத்தியோகத்தைத் தாயுமானவருக்கே கொடுத்தனர். தாயுமானவர், தந் தை வாங்கிய புகழை விட அதிகமாகப் புகழ்பெற்றார்.

அக்காலத்தில், மௌன குருதேசிகர் எனும் சிவயோகி ஒருவர், சிவ ஸ்தல யாத்திரை செய்துகொண்டு வருகையில், திரிசிர மலையில் எழுந்த

ளியிருக்கும் சிவபெருமானையும் தரிசிக்க எண்ணங்கொண்டு சாரமா முனி மடத்திற்றங்கினர். தாயுமானவர், மௌனகுரு தேசிகரின் கல்வித்திற னைக்கண்டு உவகைபூத்து அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கி அவரிடம் சீடராகவிருந்து உபதேசம் பெற்று, கடவுளின் இயல்பை நன்கு அறிந்து ஆனந்தங்கொண்டார்.

பிறகு தாயுமானவர் முழுதுமொருங் குணர்ந்தோன் தன்மையை 'திருவருள் விலாசப் பரசிவவணக்கம்' எனும் மூன்று பதிகங்களிற்பாடினர். இரண்டாவதாக சிவபெருமானே முதற்கடவுளெனவும், சிவ சக்தியைக் குறித்தும் 'பரிபூரணானந்தம்' எனும் பத்துப் பதிகங்கள் பாடினர். மூன்ருவதாக 'சின்மயானந்தகுரு' எனும் பதிகங்களில் தமது குருவின் பிரதாபத்தை பத்துப்பதிகங்களிற் பாடினர். அவை "ஆழாழி கரையின்றி நிற்கவிலையோ" என்றுத் தொடக்கத்தன.

தாயுமானவருடைய சிறிய தாயாரின் புதல்வராய அருளையப் பிள்ளை என்பவர், தாயுமானவரின் பாடல்களைப் பரவச் செய்து, அவரையே ஞான குருவாகக் கொண்டனர்.

தாயுமானவர் தாம் எழுதும் ஏடுகளில், திருச்சிற்றம்பலம், சிவமயம் எனும் சொற்களை எழுதி வருவார். அரசர் இதனைக் கண்டு அதிக மன மகிழ் வெய்தினர். சில காலங் கழிந்ததும், அரசன் இறந்து போயினர். அரசர் மனைவி தாயுமானவரிடம் "தாயுமானவரே! அரசரோ இறந்து போயினர்: தாங்கள் இராஜ்ஜியத்தைப்பார்த்துக்கொண்டிருக்கப் பிரார்த்திக்கின்றேன்" என வேண்ட, அவள் உள்ளத்தில் தகாத சிந்தனை கொண்டதையுணர்ந்த தாயுமானவர் அதை மறுத்தற் கஞ்சி, அன்றிரவே, அருளையப் பிள்ளையுடன் ஸ்தல யாத்திரை செய்யக்கருதித் தெற்கு நோக்கிச்சென்ருர். நல்லூர் எனும்கிராமத்தை இருவரும்அடைந்தார்கள். ஆனல் அங்கு தாயுமானவர் சிவ பூஜைப் பெட்டியை எடுத்துவர மறந்துபோனமையின் அருளையப் பிள்ளையை அதை எடுத்து வரும்படி அனுப்பிப் பட்டினியாகயிருந்தார். அவ்வூரின்கண் வசித்திருந்த பல சிவ நேயர்கள் தாயுமானவரின் பக்தியையும், முகப்பொலிவையும் கண்டு, மனங்கசிந்து ஆகாரம் உட்கொள்ளும்படியாய் வேண்டினர்கள். ஆனல் தாயுமானவர் அவர்களுடைய வேண்டுகோளை மறுக்க இயலாமல் கொஞ்சம் பாலை யருந்தினர். பாலை யருந்துமுன் தாம் சிவபூஜை செய்யாததைக்குறித்து பின் வருமாறு பாடினர்:—

பண்ணே னுனக்கான பூசையொரு வடிவிலே
 பாவித் திறைஞ்ச வாங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
 பனிமல ரெடுக்க மனமு
நண்ணே னலாமலிரு கைதான் குவிக்கவெனில்
 நாணுமென் னுளநிற் றிநீ
நான்கும்பி டும்போ தரைக்கும்பி டாதலால்
 நான்பூசை செய்யன் முறையோ
விண்ணே விணுதியாம் பூதமே நாதமே
 வேதமே வேதாந் தமே

மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள்
வித்தேயவ் வித்தின் முளேயே
கண்ணே கருத்தேயென் எண்ணே எழுத்தே
கதிக்கான மோன வடிவே
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணை காக்க டவுளே.

அரசி, தாயுமானவரைக் காணமையால் மனம் நொந்து அவர் இருக்குமிடத்தை அறிந்து வரும்படி சில வீரர்களை அனுப்பினள். அனுப்பியவர்களுள், மந்திர வித்தை தெரிந்த ஒருவன் நல்லூரை யடைந்து, நிஷ்டையிலிருந்த தாயுமானவர் மாட்டு வசிய மந்திரம் பிரயோகித்தான். பிரயோகிக்கவே, தாயுமானவர் பின்புறம் திரும்பிப் பார்த்துச் சந்தோஷங் கொண்டாராம். அம்மந்திரவாதி அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கிச் சென்முன். பிறகு தாயுமானவர், அருளேயப் பிள்ளேயுடன் இராமேச்சுரம் சென்றார்.

இராமேச்சுரம் சென்றதே, இருவரும் கடலில் நீராடிய பின்னர் தாயுமானவர் ஸ்ரீராமநாதரை வணங்கி, மலேவளர் காதலி யெனும் உமாதேவியாரைக் குறித்து:—

"பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கள் மித்திரர்கள்
பக்கமுண் டெக்கா லமும்"

என்று தொடங்கும் பாடல்களைப் பாடினர்.

உமா தேவியாரைக் குறித்து இன்னும் ஒன்பது பாடல்கள் பாடினர். சின்னுட் கழித்து இருவரும் வேதாரண்ய மடைந்தனர். சுற்றத்தார்களின் வற்புறுத்தலுக்காகத் தாயுமானவர் சிறந்த குலத்தி லுதித்த ஒரு பெண்ணே மணந்து இல்லறம் நடத்தி வருகையில் அநேக பாடல்கள் பாடினர்.

தாயுமானவர் அன்னை பரலோகப் பிராப்தி யடைந்ததும் தாயுமானவரின் மனைவி ஓர் ஆண்மகவை ஈன்றனள். 'கனகசபாபதிப் பிள்ளை' எனும் பெயர் அப்புதல்வருக்கு இடப்பட்டது. பிறகு கனகசபாபதிப் பிள்ளேயின் அன்னேயாகிய தாயுமானவரின் பத்தினியும் சிவபதவி யடைந்தனர்.

"ஊருஞ் சதமல்ல உற்றார் சதமல்ல உற்றுப் பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டீர் சதமல்ல பிள்ளைக ளும்
சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத் திலே
யாருஞ் சதமல்ல நின்றாள் சதம் கச்சியே கம்பனே!"

எனும் பட்டினத்தடிகளின் பாடலின்படி பூலோக வாழ்க்கை அநித்தியமானதென்று நன்கு யறிந்து, தமது திருக்குமாரனேயும், செல்வத்தையும் தமது தமையனிடத்தில் ஒப்புவித்துத் துறவு பூண்டு, அருளேயப் பிள்ளேயுடன் தேச சஞ்சாரம் செய்து வருவாராயினர்.

திரிச்சிராப்பள்ளியில் சாரமாமுனி மடத்திலே தங்கி யிருந்தவரும், தாயுமானவரின் குருவுமான மௌனகுரு தேசிகர் பரிபூரண தசையடையவே, அச்சமயத்தில் அருளேயப் பிள்ளேயுடன் அங்கு வந்த தாயுமானவர் அம்மடத்திற்கு வந்து, தேசிகரின்பிரிவை யாற்றாது துக்கித்து, பிறகு அம்

மட்டத்திற்கே தலைவராயினர். பிறகு, தேசசஞ்சாரம் செய்து வருகையில், இராமநாத புரத்திலுள்ள சிறு கானத்தின் ஒரு பெரிய புளிய மரத்தடியில் தவநிலையிற் றங்கியிருந்தார்.

இராமநாத புரத்தின்கண் கீழ் திசையிலுள்ள இலட்சுமி புரத்தில், ஒரு பிராமண ஸ்திரீயின் வீட்டில், தாயுமானவர் தமக்குப் பசிப்பிணி வந்தபோது, பிக்ஷை வாங்கிச் செல்வார். தாயுமானவர் பலதினங்கள் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து நிஷ்டையில் இருந்தா ராதலின், அவர் உயிருடன் இருக்கின்றார் என்பதாகப் பார்ப்பவர்கள் கருதவில்லை. இதைச் சிலர் அரசனுக்குக் கூற, அவன் தாயுமானவரின் உண்மையை அறியாது நெருப்பிட்டுக்கொளுத்திடுதிர் எனக் கூற, சிதையின் மேல் தாயுமானவரை உயிருடன் வைத்தனர். தீச்சுட நிஷ்டை கலைந்த தாயுமானவர் நடந்ததை அறிந்து அரசனை மன்னித்துப் பரிபூரண தசை யடைந்தார். பொங்கும்! மங்களம் எங்கும் தங்குக!

C. S. இராம ஐயர், நாவல்ஹவுஸ்,

பார்க்டவுன், கோயம்புத்தூர்.

குறிப்பு:—தாயுமான சுவாமிகள் பிறந்தகாலம் இதுகாறும் எதிலேனும் குறிப்பிடப்பட் டிருப்பதாய்த் தோன்றவில்லை. அவர் அருளிய நூல்களின் முன்னுரையில் சற்றேறக்குறைய 200 வருடங்களுக்கு முன் என்று கொஞ்ச காலத்திற்கு முன் வரையில் வரையப்பட்டு வந்து, இப்போது சற்றேறக்குறைய 300 வருடங்களுக்கு முன் என்று வரையப்பட்டிருக்கிறது. ஆனால் அவர் விதேகமுத்திபெற்ற காலம் மட்டும் மிகப் புராதனமான (தாயுமானவர் பாடல்கள) ஒரு புத்தகத்திலிருக்கக் கண்டோம். அவர் அடைந்த காலம் கரபாத்திர சுவாமிகளும் இன்னும் மூன்று நான்கு ஜீவன் முத்தர்களும் இருந்து சரமகவிகள் இயற்றியிருக்கின்றனர். அக்கவிகள் பழைய தாயுமானவர் நூலில் இருந்தன. அந்த ஏடுகளை யெடுத்துப் பிரத்தியேகமாக வைத்திருந்தோம். இச்சமயம் அவைகாணப்படவில்லை. ஆயினும் அப்பாடல்களில் முதற்பாடல் கரபாத்திர சுவாமிகளால் அருளப்பட்டது. அதில் குறித்திருந்த காலம் கலியுகாதி 47-103 சுபகிருது ஹூ தை மூ வெண்மதிவாரம் பூரணத்திதியே தாயுமாம் சிவம் நற்சிவ்ததினிற் கலந்தாம் தினமே என்றிருந்தது. (அதாவது - தாயுமானவர் அடைந்த வருடம் 1601-அப்போது அக்பர் சக்ரவர்த்தி இந்தியாவிலும் எலிஜபெத்மகாராணியார் இங்கிலாந்திலும் அரசாக்ஷி செய்துகொண் டிருந்தார்கள்.) அவர் இராமநாதபுரத்தின் வடபால் பரிபூரண தசையடைந்ததாய் மேற்கண்ட கவியில் கூறப்பட்டிருக்கிறது.

அவர் அடைந்தபோது அவர் சீடராகிய அருளையர் என்பவர் தம் குருவை அருள் வாக்கிய அகவல் என்றபாவால் துதித்திருக்கிறார். அதை அறிவை யூன்றி வாசித்தால் தாயுமானவருடைய அரிய உபதேச மொழிகளில் பலவற்றை யுணரலாகும். அதைப் பன்முறை வாசிக்க வாசிக்க ஆழ்ந்த கருத்துகள் விளங்குமென்பது அனுபவம்.

பத்திரிகாசிரியர்.

---

## ஆரம்பக்கல்வி உபாத்தியாயர்கள்

ஆரம்பக் கல்வி உபாத்தியாயர்களைத் தேர்ந்தெடுத்தல், அவர்கட்குப் போதனு முறையைக் கற்பித்தலாதிய சில விஷயங்களைப் பற்றித் தெரிவிக்க மிக்க விருப்பங் கொண்டுளோம். பன்னுட்களாக இவ்விருப்பம் இடையருது எமதுளத்திற் குடி கொண்டுள்ள தெனினும், அவ்வாறு வரைவதால் சில நண்பர்களுக்கு வருத்த முண்டாகுமோ வெனும் ஐயுறவு அதனைத் தடைசெய்துவந்தது. ஆயினும், பொது நல அபிவிருத்திக்குரிய விஷயங்களைக் கூருதொழிதல் குற்றமாகு மாதலானும், நண்பர்கள் தம்மிடத் தக்குற்ற மிருப்பின் அதனை நீக்க முயற்சித்தும், இன்றேல் அத்தகையோர்க்கே கூறப்பட்டதெனக் களித்தும் அங்கீகரிப்பரெனக் கருதி இதனை வரையத் துணிந்தாம்.

எல்லாத் தொழில்களிலுஞ் சிறந்தது உபாத்திமைத் தொழிலே, அதிலும் ஆரம்பக் கல்வி கற்பித்தல், விசேஷம். ஒருவன் நன்னடக்கை யுடையனுதற்கும் தீயனுதற்கும் அவனது இளமைப்பழக்கமே யன்றோ காரணமாவது? 'தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டும்.' இளமையிற் றிருந்தாதவர்கள் முதுமையிற் றிருந்துவது மஹாபிரயாசம். அதுவும் பெற்றோர் பிள்ளைகளை மிக்க செல்வமாக வளர்ப்பவராதலின் நன்னடைக்கையைப்பற்றிப் பெரும்பாலும் கவனிப்பதேகிடையாது. பிள்ளைகள் ஏதாவதுதுஷ்டகாரியம் செய்தால் தாய்தந்தையர் அவ்வாறு செய்ய வேண்டா மென்று கூறினும் கேளாமல், 'ஆகட்டும் உபாத்தியாயரிடம் சொல்லுகிறேன்,' என்றால் உடனே அடங்கி விடுவது வழக்கம். கிராம வாசிகள் இப்பொறுப்புகளை யெல்லாம் உபாத்தியாயரிடமே ஒப்புவித்திருப்பது பிரத்தியக்ஷம். தம்கடமையை யறியாதவிளையாட்டுத் தன்மையுள்ள குழந்தைகளுக்குக் கல்வி கற்பித்தல் எவ்வளவுகஷ்டமான காரியம். குழந்தைகளோடு தாமுமோர் குழந்தையாய்விளையாடி முகமலர்ச்சியுடன்இன்சொற்களால் கதைகளைச் சொல்லிச் சந்தோஷமுண்டாக்கித் தம் வசப் படுத்தி போதிக்க வேண்டும். கல்வித் தருவானது கொடுமையாக வின்றிச் செம்மையாய் வளர வித்திட்டு வளர்ப்போர் இவ்வுபாத்தியாயர்களே யாவர். இதனுல் இவர்கள் எத்தகையரிய காரியத்தைத் தாங்கள் மேற்கொண்டவ ராகின்றன ரென்பது தெளிவாகிறது. ஆகவே, இவர்கள் நிறைந்த கல்வியும் நற்குண நற்செய்கையு முடைத்தா யிருத்தலவசிய மன்றோ? பவணந்தி முனிவரும், ஆசிரிய லக்ஷணம் கூறு மிடத்து, 'ஆசிரிய னுவான் உயர் குடிப் பிறப்பும், ஜீவகாருண்யமும், கடவுள் வழிபாடும், பெருந்தகைமையும், பல நூல்களிற் பழகிய தேர்ச்சியும், போதநாசக்தியும், பூமியையும் மலையையும் தராசு கோலையும் பூவையும் ஒக்கின்ற குணங்களும், உலகநடையையறிகிற அறிவும் இவைபோல்வன பிற உயர்ந்த குணங்களும் பொருந்தியிருக்கப் பெற்றவனே யாவான்; இங்ஙன மின்றிப் பாடஞ் சொல்லுங்குண மில்லாமையையும், தாழ்ந்த குணமாகிய சுபாவத்தையும், பொருமையையும், செல்வத்தின் மேல் ஆசையையும், வஞ்சித்தலையும், கேட்போர்க்கு அச்ச முண்டாகப் பேசுதலையும், கழற்காய் பெய்த குடமும்,கூரிய கருக்குமடல்கள் விரியப்பெற்ற பனைமரமும், பஞ்சடைத்த குடுக்கையும், விளைந்த தென்னைமரமும் ஆகியநான்கும் தமக்கு ஒப்பென்று சொல்லும்படி மாறுபாடு கொண்ட மனத்தையும் உடையவர்கள் ஆசிரியராகார்.' எனப் பேசி யிருக்கின்றனர்.

உபாத்தியாயர் மாணவர்க்குக் கல்வி பயிற்றல் மாத்திரம் சாலாது. ஒழுக்கத்திற் பழக்க வேண்டும். கல்வி அதற்கடுத்ததே. 'ஓதலிற் சிறந் தன்று ஒழுக்க முடைமை' என நம்மூதாட்டியருளினள்.

குலனருள் தெய்வங் கொள்கை மேன்மை
கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை
நிலம்மலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்
உலகியலறிவோ டுயர்குண மினையவும்
அமைபவன் நூலுரை யாசிரி யன்னே.

மொழிகுண மின்மையும் இழிகுண வியல்பும்
அழுக்கா றவாவஞ்ச மச்ச மாடலும்
கழற்குட மடற்பனை பருத்திக் குண்டிகை
முடத்தெங் கொப்பென முரண்கொள் சிந்தையும்
உடையோ ரிலரா சிரியரா குதலே. நன்னூல்.

உபாத்தியாயர் அந்நிலையில் நின்று ஒழுகிக் காட்டினு லொழிய முடியாது. தன்னை யடக்கினேனே மற்றவர்களையும் அடக்க வல்லவனுவன். உபாத்தியாயர் நின்றுகொண்டே நீர் பெய்தால் பையன் ஓடிக்கொண்டே பெய்கிறுன். ஆகையால், தங்கள்பிள்ளைகளின் ஒழுக்கவிஷயத்தையும் உபாத்தியாயரது பொறுப்பிலேயே விடும் பெற்றேர்களுள்ள கிராமங்களிலேயே பெரும்பாலும் காரிய நிர்வாகஞ்செய்ய வேண்டியவர்களான, இவ்வாரம்பக் கலவி யுபாத்தியாயர்கள் எத்தகையோரா யிருத்தல் வேண்டு மென்பது புலனும். இவ்விஷயத்தில் அதிகாரிகள் மிக்ககவனம் செலுத்துவது நலம். 'கெட்டவனுக்குப் பள்ளிக்கூடம்,' என்கிறபடி, வேறெந்த விதத்தாலும் ஜீவிக்க முடியாதவர்கள், 'என்னமோ நான்காவது வகுப்புவரை வாசித்திருக்கிறேம் தப்பும் தவறுமாய் எழுதப் படிக்கத் தெரிந்திருக்கிறது; இக் கல்வியைக் கொண்டு வேறெந்த உத்தியோகத்தைச் சம்பாதிப்பது? இந்த உபாத்தியார் வேலைக்குப் போனுல் 12-13 சம்பளம் கிடைக்கிறது,' என்று உபாத்தியாயர்களாய் வந்து விட்டால், அவர்களிடமிருந்து எவ்வித நன்மையை எதிர் பார்க்கக்கூடும். சில நாட்களுக்குமுன் ஒரூரில் நடைபெற்ற உபாத்திமைச் சங்கமொன்றில், கல்வியா செல்வமா எது பெரிது? என்பதைப்பற்றி இருவருக்குள் நிகழ்ந்த வாதத்தில், (Debate) முதலில் கல்வியே பெரிது என்றுரைத்தவ ரொழிய மற்றவர் யாவரும் "செல்வமே கல்வியினும் சிறப்புடைத்து; அதன் பொருட்டே யன்றே நாம் இவ்வேலையி லமர்ந்து கஷ்டப்படுவது?" எனப்பேசி முடித்தனர். அந்தோ! பொருளீட்டலே இவர்களது முக்கிய நோக்கமாயின் நாள் 1-க்கு 12 அணு—என்? 1-ருபாய் கூட சம்பாதிக்கக்கூடிய கூலிவேலையை இவர்கள் என் கைக்கொள்ள லாகாதோ? தெரியவில்லை.

பணத்தின் நிமித்தம் பாடுபடாதோர் எவரு மிலரென்ப துண்மையாயினும், 'கேடில் விழுச் செல்வம் கல்வி,' ,கைப்பொருடன்னின் மெய்ப்பொருள் கல்வி,' 'பொருள் அறமும் இன்பமும் பயக்கும்,' 'கல்வியோ அறம் பொருள் இன்பமும் வீடும் பயக்கும்,' 'தேட்டம் மரியாதை; தனம் தரியாது,' என்று மிவைபோன்ற ஆப்த வசனங்களை யறியாது தொழில் புரியு மித்தகையோர், 'மாதம் பிறந்தால் எப்படியும் சம்பளம் வந்து விடு

கிறது; வேறென்ன ஆகவேண்டிய' தென, வாழ்நாளை வீணய்க் கழிப்ப தன்றித் தாம் மேன் மேலும் கல்வி கற்று விருத்தியடைய வேண்டுமென்ப தையும், சிறுவர்க்குப் புத்தி போதித்துக் கல்வி யூட்டி நாட்டிற்கான நன் மைகளைச் செய்யவேண்டு மென்பதையும் பற்றிச் சிறிதேனும் சிந்தித்தலும் செய்வரோ என்பதே சந்தேகித்தற் கிடமானதா யிருக்கிறது.

சிலர் தம் சொந்த ஊர்களில், வந்த வரையில் வரட்டும், கைச் செல விற் காவதாகு மென்று, 5-6 பிள்ளைகளை மடக்கி வைத்துக்கொண்டு தம் சொந்த வேலைகளுக் கிடையில் இரண்டொரு எழுத்துகளைக் கற்பிப்பதும், அதிகாரிகள் வரும்போது மாத்திரம் ஊர்ப்பிள்ளைகளில் அநேகர்க்கு தலை க்கு ஓரணவோ இரண்டணவோ நாளொன்றுக்குக் கொடுத்து அழைத்து வந்து நிரப்பி வைத்துக்கொண்டு வருஷம் 1 - க்கு 150, 200 கிரான்ட் வாங்குவதுமா யிருக்கிறார்கள்.

இன்னும் இவர்களிற் சிலர்க்குப் பிழையின்றி இரண்டொரு வாக்கியங் கள் வரையவும் தெரிகிறதில்லை. சிலர் எமக்கு எழுதிய நிருபங்களினின்று சிலவற்றைத் திருஷ்டாந்தமாகக் காட்டுவாம்; 'பொர்ப்பாதகமலங்களுக்கு,' 'வண்டியேரி,' 'தெறியப் படுத்தவும்,' 'பெருமையினற் மனம் அயர்கி றேன்,' 'தாமறை,' 'ருமன்.' என்று எழுதுகிறார்கள்! இவைகளைக்கண்டு கற் றோரி லெவர்தாம் அருவருப்புக் கொள்ளார். இத்தகையோர் தம் மாணவர் க்குப் பிழையின்றி யெழுதப் பழக்குவ தெப்படி ? இக்குறை இலக்கணப் பயிற்சி யின்மையா லுண்டானது. போதனமுறைப் பாடசாலைகளில் மற் றப் பாடங்களுடன் இலக்கணத்தையும் பாடமாக வைத்தால் எவ்வளவோ நன்மையா யிருக்கும். இன்றேல் உபாத்தியாயர்கள் தாங்களே தனிமையில் தங்கள் சொந்த நேரத்தில் வாசித் தறிந்து கொள்ளும்படி கேட்டுக் கொள் ளுகிறோம்.

நண்பர்களே! இதுகாறும் கூறப்பட்ட விஷயங்கள் உண்மையா ? அல்லவா ? என்பதை நீங்களே பரீக்ஷித்துப் பாருங்கள். இப்போது நாம் அனுபவிக்க வேண்டிய இன்ப துன்பங்களுக்கான செல்வமும் வறுமை யும் நமது வினைக்குத் தக்கவாறு ஆண்டவனல் அமைக்கப்பட் டிருக்கின் றன. 'பொருள் முயற்சி எண்ணிறந்த வாயினும் ஊழ் கூட்டும்படி யன்றிக் கூடா. இவ்வருமையான தொழிலை அளித்த அறப்பெருங் கடலை வாயார வாழ்த்தி நமது கடமையை மனச்சாக்ஷிக்கு விரோத மில்லாமல் புண்ணிய பாபங்களுக்குப்பயந்து இயற்றிவருவோமாயின் இவ்வுலகில் அதற்குத் தக்க ஊதியம் கிடைக்கா விடினும், அதுவே இம்மையிற் புகழும், அம்மையில் வீடும் அளிக்கும் என்பது உண்மை.

பூ. ஸ்ரீநிவாஸன்,
தமிழ்ப்பண்டிதன், இராணிப்பேட்டை.

குறிப்பு:—இந்த வியாசம் மேற்படி குணங்களையுடைய நண்பர்களுக் குக் கோபத்தை யுண்டாக்கலாகும். குறையிலார் மனிதரில் ஒருவருமிலர். ஆகையால் நமது தாய்நாட்டின் க்ஷேமத்தைக்கருதி மேற்படி குறைகளை யுடையோர் தங்களைத் திருத்திக்கொள்ள வேண்டு மென்று நம் நண்பர் கூறியபடி செய்வது பெருந்தகைமை. ஏனையோரும் 'அத்தகையோர்க்கு விஷயத்தை விளக்கிக் காட்டவேண்டும். இத்தகைய உயர்குணங்கள் ஆரம் பக்கல்வி உபாத்திமாரிடம் எதிர்பார்க்கப் படுவதால் அவர்களுக்குப் போ

திய சம்பளம் கிடைக்கும்படி செய்ய நம்மவர் முயற்சி செய்யவேண்டியது நம் தாய் நாட்டின் க்ஷேமத்திற்கு இன்றியமையாத அவசியமாகும். ஆண்டவன் அருள்புரிவாராக. பத்திராதிபர்.

---

## விவசாய ஊக்கமும் விதை சேகரிப்பும்

விவசாயிகள், பூசாரத்திற்குத் தகுந்த பயிரிடுவதும், இடத்தின் சீதோஷ்ணத்திற்கும் பயிரின் தன்மைக்கும் தக்கபடி மராமத்து செய்தலும் வேண்டும். எருவிடுதல், நீர்ப்பாய்ச்சல் முதலானவைகள், சமையோசிதமாகச் செய்வதவசியம். நல்ல பலிதம் உண்டாக்கி, ஊதியம் அடைவதற்கு, வியவசாய ஊக்கமும் அனுபோகமும் வேண்டும்.

2. கை கொடுப்பது:—இதற்கு ஒற்றுமையாக, பலவித விதை சேகரிப்புக்கு வேண்டிய சாதனங்களும், சந்தர்ப்பங்களும் ஒத்துழைப்பும், இடைக்கிடையே தூண்டப்படல்வேண்டும். தற்காலத்திய பழக்க வழக்கங்களை எண்ணிப்பார்க்கும் போது தக்கமிராசுதார்களும் வித்யா நிபுணர்களுமாகிய விவசாய சங்கத்தார், விவசாய இலாகாக்காரர், ஜனுப், சா, கோ, இ, அ, போன்ற விதை வியாபாரிகள், இவர்களின் உழைப்பும், விவவசாயக் காக்ஷிகளுமே கை கொடுத்து உதவக்கூடியன.

3. முன்பின் வளமை:—ஆதியில் பூசாரத்திற்குத் தகுந்த விதைகள் பல இடங்களிலிருந்து கொண்டுவரப்பட்டு, இப்போது ஒருவாறு தஞ்சை ஜில்லாவில் அனுஷ்டானத்தி லிருக்கிறது. அவைகளுக்கு அந்த விதை வந்த ஊரின் பெயரையே நாமகரணஞ் சூட்டி நெல்லூர்ச் சம்பா, ஆப்பாஊர்ச் சம்பா, பழனிச் சம்பா, சாத்தூர்காய், நக்கப்புரத்துப் பிள்ளை, மோரீஸ்கடலே, மோரீஸ் கரும்பு, குடகு ஆரஞ்சு, மேலச்சாலே ஒட்டு, பெங்களூரா என்பதாகவும், காதர், பீத்தர்,பாதிரி, என்பதாக ஒட்டுக்கட்டும் நிபுணர்களான தோட்டக்காரர்களின் பெயர்களாலும் வழங்கி வருகின்றன,

4. விவசாயவிர்த்திக்கு யாத்திரை:—முன் நாளில் தேர் திருவிழா கலியாணம் முதலான சுபசோபனதிகள் நிமித்தம் விவசாயிகள் தங்கள் ஆப்தர்களின் இல்லங்களுக்குச் செல்லுந்தோறும், ஒருவர்க்கொருவர் அன்பு பாராட்டி, தானியம், காய்கறி, பழவகை விதைகள், பூஜைக்கான புஷ்பவிதை,பதியன் வகையறாக்கள், மாற்றிக்கொடுத்துக் கொள்வது வழக்கம். விதைதானம் என்றபெயரும், வழங்கி வருகிறது. க்ஷேத்திர யாத்திரை தீர்த்த யாத்திரை நோக்கமாக வெளி ஸ்தலங்களுக்குச் செல்வோர், கையில் விதை சேகரித்துக்கொண்டுவந்து, ஆங்காங்குபயிரிட்டு அதன்பலனைக் குறைந்த பக்ஷம் அங்கு ஒரு நாளேனும் உண்ணவேண்டும். அங்கு, தாம உற்பத்திசெய்த புஷ்பத்தில் ஒன்றாவது சேர்த்து அனுதீசனுக்கு அர்ச்சித்தால், அதிக விசேஷம். "யாத்திரையின் பலன் அதில் இருக்கிறது" என்று ஓர்பழமொழி உண்டு. அதை அனுசரித்து யாத்திரைக்காரர் ஆங்காங்கு தாமதித்திருக்கும் நாட்களுக்குத் தக்கபடி சீக்கிரம் பலன் கைக்கு வரக்கூடிய முளைக்கீரை, காசித்தும்பைப்பூ (பாவஸம்) இவைகளைப் பயிரிட்டு உண்டு அர்ச்சித்து ஊர் வந்து சேரும் வழக்கம் நாளைக்கும் நடந்து வருகிறது. ஆகையால் அன்பர்களே! விவசாய விர்த்தியிலும் விதை சேகரிப்

3

பிலும் நம்முன்னோர்களின் கருத்தை இங்கு நன்றாகக் கவனித்தல் வேண்டும்.

5. தற்கால வளமை:—அதை ஒட்டிச் சில வருஷங்களாகச் சேலம் முதலான இடங்களில் ஒட்டுமாங்கன்றுகள் கொய்யா மாதுளை ஆப்பில் முதலான பல விருக்ஷங்களின் கன்றுகள் காய் கறி, புஷ்பச்செடிகள் நல்ல ஜாதி வகையாகவும் சீக்கிரம் பலன் தரக்கூடியவையாகவும் தயாரித்து தருவித்தும், காப்பாற்றிவைத்துக் கொண்டும், தேவையானவர்களுக்கு விற்று வரும் சிரமத்தைக் கைக்கொண்டிருக்கும் சேலம் ஜனாப், சா, கோ, இ. அப்தல்ரகிமான் சாஹிப் போன்றவர்களின் முறை எவராலும் ஆதரிக்கத் தக்கது இவ்விதமான முறை எற்பட்ட பின்புதான் எந்த ஸ்டேஷன்களிலும் ஒட்டுப்பழவகை மிகுதியாக விற்கப்படுகின்றன. அவைகளின் வரலாற்றைப்பற்றி நாம் பல இடங்களில் விசாரித்தபோது அக்கம் பக்கத்திய பண்ணைத்தோட்டத்தின் பழம் என்றும் அதற்கு மூலகாரணம் சேலம் என்றும் அறிந்து ஆனந்தித்தோம். ஆனால் அங்கு ஒருவருஷம் சப்ளை செய்த கன்று விதை வகையறா மறுவருஷம் கையிருப்பில் இல்லை என்றும், நாம் ஆர்டர் அனுப்பிக் கேட்ட பலவற்றிற்குப் பதிலாக வேறு சில வந்ததின் நிமித்தமும் அசிரத்தை காரணமாயிருக்குமோ, ஆசாமிகளின் கவனக் குறைவோ என வருந்த நேரிட்டதாயினும், விற்காமையால் வருவிக்காமை தயாரிக்காமை போன்ற அதிலிருக்கும் கஷ்டநஷ்டங்களைக் கவனிக்கும் போது அதைக் கருத்தில் வைக்க மனமில்லை.

6. கடவுள் நோக்கம்:—கடவுள் விதைகளின் தினுசுகள் அழிந்து போகா வண்ணம், பழத்தின் நடுவில் அமைத்து விதை கெடாமலிருக்கப் பாகு போன்ற இனிய சுவை கொடுத்து, அது அபிவிர்த்தியாக வேண்டியதற்கான பல மார்க்கங்களையும்தேடி பந்தோபஸ்துசெய்து வைத்திருக்கின்றார் உதாரணமாக, அதிக உயரத்தி லிருந்து தேங்காய் நெற்று கீழே விழுந்து உடைந்து கெட்டுப் போகாதிருக்க வேண்டிய நோக்கத்தோடு, அதற்கு மிருதுவான பஞ்சுபோன்ற மட்டைநாரைச் சுற்றிலும் அமைத்துக் கொடுத்து மேலே மழை ஜலம் விழுந்து ஊறி ஊறி, விதை கெடாதிருக்க வேண்டுமென்று, மெருகுள்ள மேற் பரணியையும் கொடுத்திருக்கின்றார். இந்த அருமையை எவர் தான் வியக்கார்? கிச்சிலிக் கனிக்கு மேற்றோலில் ஒரு விதத் தைலமும், பழத்தை விட்டு வெளியே வந்திருக்கும் முந்திரிக் கொட்டை சேங்கொட்டை முதலியவைகளுக்கு, மேலோடு எவ்வளவு அழுத்தமாகவும் அமைக்கப்பட்டிருக்கிறது. நாம் ஜன்னல் முதலான மரச் சாமான்களுக்கு ஈரத்தால் மடித்துக் கெடா வண்ணம், மர எண்ணெய்ச் சாயம் ஈய வெள்ளை, (ஒயிட்லெட்) முதலானவைகளால் பத்திரப் படுத்துவதுபோல் ஈரமும் பூச்சிகளும் அணுகா வண்ணம் ஓர் விதக் காரசாரமாகிய தைலத்தையும் புகட்டி யிருக்கின்றார். இவைகளினால் உலகத்துள்ள பல தினிசு விதைகள் எல்லாம் அழிந்து போகாது அபிவிர்த்தியாகிக் கொண்டிருக்க வேண்டுமென்ற எண்ணம் எவ்வளவு இருக்கிறது பாருங்கள். இவ்வளவு ஜாக்கிரதையுடனும் பந்தோபஸ்துடனும் வித்துக்களைச் சிருஷ்ட்டித் திருப்பதற்கு பர்த்தி செய்ய நம்மால் என்ன கூடும்?

ஸர்வ தயாபரக் கடவுளாகிய அந்த அனாதிப் பொருள் ஆத்ம கோடிகளாகிய நம்மிடம் வைத்திருக்கும் அன்புக்கு அளவு முண்டோ ?

7. நமது கடமை:—ஆகவே அன்பர்களே! அவருடைய நோக்கத்திற்கு மாறின்றி நம் தேசத்திய ௸தோஷ்ணத்திற்குத் தகுந்தபடி விதைகளைத் தருவித்தோ அல்லது உற்பத்தி செய்தோ வைத்துக்கொண்டு வேண்டியவர்களுக்கு விற்றுவரும் விதைக் களஞ்சியக்காடர் விலை ஜாப்தாவில் இல்லாத விதைகளை, விர்த்தியை உத்தேசித்து, இலவசமாகக் கொடுத்துதவி அபிமானம் காட்டவேண்டும். விதை வியாபாரிகளின் தொழில் களைத்துப்போகா வண்ணம், காப்பாற்றி வைத்திருக்கும் கடமையையும் அன்பையும் உத்தேசித்து விலையைஒருபொருட்டாக மதியாது தேவையான விதைகள் கன்றுகள் பதியன்கள் வருடந்தோறும் வாங்கிப் பரவச் செய்ய வேண்டும்.

8. உபகாரிகள் மாயவரம் தாலுக் போர்ட் பிரஸிடெண்டும் கலைக்டருமாயிருந்த மிஸ்டர் இராமச்சந்திரநெடுங்காடியைப்போல் கிராமாந்தரங்களிலுள்ள மிராசுதார்களுக்கும் பாடசாலைகளுக்கும் பல விதைகளைத் தருவித்துத் கொடுத்துப் பலன் பார்க்க வேண்டும்.

இது விஷயமாக அதிக சிரத்தை எடுத்துக்கொண்டு பாடசாலைகளுக்கும் ஊக்க முள்ளவர்களுக்கும் இலவசமாகக் கொடுத்துவரும் தஞ்சை கருணாநந்தபுரம் பண்ணையார், பெரிய கார்குடி பண்ணை ஸ்ரீமான், கா. சிவ. குருநாத பிள்ளை, பேரளம் ரெயில்வே D. P. W. இன்ஸ்பெக்டர் துரை, மாயவரம் முன்ஸிபல் ஸ்கூல் மிஸ்டர். சுப்ரமண்ய அய்யர், மாயவரம் தாலுக் போர்ட் பிரஸிடெண்டு ஸ்ரீமான் டேவிட் நாடார் இவர்களை இங்கு குறிப்பிடாது விட முடியாது.

ஒரு சிறு தீர்மானம்:—ஜல வசதியுள்ள பாடசாலைத் தோட்டத்திலும் ஆலயத்தின் வாசலிலும் தென்னை, பாக்குக் கன்றுகள் வைத்து வளர்க்க விருப்பமுள்ளவர்களுக்கு ஷை கன்றுகள் கொடுத்து உதவத்தீர்மானித்திருக்கிறேன். அவை ஸ்கூல் ஹெட்மாஸ்டர், சூப்பர் வைசர் அல்லது பஞ்சாயத்தார் மூலமாகக் கொடுக்கப்படும். அபேக்ஷகர் நாளது ரௌத்திரி௵ அற்பசி௴ 1 தேதிக்குள் தெரிவித்தால் தேவையான கன்றுகள் தயாரித்து அனுப்பிவர அனுகூலமா யிருக்கும். ரெயில் மூலமாக அனுப்புவதானால் சார்ஜு அபேக்ஷகர் புறம்; அன்புடன் வளர்ப்பதும் அவ்வப்போது அபிவிர்த்தியை அறிவிப்பதுமே நிபந்தனை.

எஸ். முத்துக்குமாரசாமி பிள்ளை,
71, மிராஸ் குத்தாலம், S. I. R.

---

## இல்லறம்—தானம்

(54-ம் பக்கத்தொடர்ச்சி)

இல்லறம் புரிவார்க்குத் தானம் என்பது சிறந்ததர்மம். தான மென்பதைச் சகலரும் புகழ்கிறார்கள். தானத்தால் சாதிக்க முடியாத தொன்றுமில்லை. உலகத்தி லெல்லாருங் கொடுப்பவனையே யடுத்துப் பிழைக்கிறார்கள். தானத்தால் பகைவர்களையும் விலக்குகிறார்கள். தானத்தால் சத்துருவும் நண்ப ராகின்றனர்.'' என்று ஸ்மிருதிகள் கூறுகின்றன. "ஒருவன் தன்னை யாசித்தவுடனே அசூயை யின்றிக் கிஞ்சித்தேனும் கொடுக்க வேண்டும்'' என்று மனு கூறினார். "தன் சக்திக்குத் தக்கபடி தினந்தோ

றும் தானம் செய்ய வேண்டும்" என்று யாக்ஞவல்கியர் கூறினர். "தானம் நித்தியம், நைமித்திகம், காமியம், விமலம் என்று நான்கு வகைப்படும். பிரதி பிரயோசனத்தை விரும்பாமலும், அவனிடத்தில் உபகாரத்தை அடையாமலும் சத்பாத்திரத்தில் தினந்தோறுங் கொடுக்கப்படும் தானம் நித்திய மெனப்படும். பாப நிவிர்த்திக்காக வேத முணர்ந்த வித்வானுக்குக் கொடுக்கப்படும் தானம் நைமித்திகம் என்னப்படும். சந்ததி, ஜயம், ஐசுவரியம் இவற்றை விரும்பிச் செய்யப்படுந் தானம் காமியதானம் என்னப்படும். கடவுளின் அருளை உத்தேசித்து வேத வேதார்த்தங்களை உணர்ந்தவர்களுக்குக் கொடுக்கப்படுவது விமல மென்று கூறப்படும்" என்று வியாசர் கூறினர். "குருக்ஷேத்திரம் முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களிலும் தீர்த்தக் கரைகளிலும், சூரிய சந்திரகிரகணம் முதலிய புண்ணிய காலங்களிலும் தனக்கு உபகாரம் செய்யாத ஒருவனுக்குக் கொடுக்கப்படும் தானம் ஸாத்விகமாம். பிரதி யுபகார முதலிய பிரயோசனத்தை விரும்பிச் செய்யப்படுந் தானம் ராஜஸமாம். தேசகால நியமமின்றித் துர்ப்பாத்திரத்தில் கொடுப்பது விதிமுறை தவறியதாதலால் அது தாமஸ மென்னப்படும். ஸாத்விக தானத்தால் தேவத் தன்மையை யடைவான். ராஜஸ தானத்தால் மனுஷ்ய தத்துவத்தைப் பெறுவான். தாமஸ தானத்தால் மிருக தத்துவத்தை யடைவான்" என்று கூறினர்.

அதிர்ஷ்டத்தினுலும் பிரயத்தினத்தினுலும் ஒருவனுக்குப் பொருள் கிடைத்தால் அதைச் சற்பாத்திரத்திலும் நன்மார்க்கத்திலும் செலவிட வேண்டும். தானம் கொடுப்பவன் தற்புகழ்ச்சி செய்து கொள்ளக் கூடாது. கொடுத்த பின் மனம் வருந்தவும் கூடாது. அப்படிச் செய்தவன் நரகத்தை யடைவான். வேதம் சர்வ தர்ம மயமாயும், சர்வ தேவ சொரூபமாயு மிருப்பதினுல் வேத முணர்ந்தவர்களுக்கே தானம் செய்ய வேண்டும். அவன் வேதமோதுவதினுல் சகல பாபங்களையு மெரித்துத் தன்னையும் கொடுத்தவனையும் காப்பாற்றுவான். முன் ஜன்மத்தில் யாசகர்களுக்கு இல்லை இல்லை" என்ற சொன்ன சொல்லே இந்த ஜன்மத்தில் பிறரைக் "கொடு கொடு" என்பதாகப் பரிணமிக்கின்றது. ஆதலால் தானம் அவசியம்செய்ய வேண்டும். அதுவும் சத்பாத்திரத்திலேயே கொடுக்க வேண்டும். காராம் பசு, குதிரை, எள்ளு, கஜம், இரதம், பணிவிடைப் பெண், வீடு, கன்னிகை, சொர்ணம், இரத்தினம் இவை பத்தும் மஹா தானங்கள் என்னப்படும். யாசகன் எதை விரும்புகிருனே அதுவும், தன் வீட்டில் எது அதிகமாக இருக்கிறதோ அதுவும் பாத்திர மறிந்து கொடுக்கத் தக்கவைகளாம். ஜலம், எளளு, தீபம், சொர்ணம், வீடு, வஸ்திரம், வெள்ளி, குதிரை, எருது, கோ, வாகனம், படுக்கை, கன்னிகை, நவதானியம்,இவை எல்லாம் தான யோக்கியமானவை. பாதரக்ஷை, குடை, சந்தனம், புஷ்பம் இவைகளையுந் தானங் கொடுக்கலாம். எல்லா தானங்களிலும் மேலானது அன்ன தானம். ஏனென்ருல் சகல பிராணிகளும் அதனுலேயே நிலைபெறுகின்றன. "தானம் கேளாதவனுக்கே கொடுக்க வேண்டும். ஆனல் அன்னம், வித்தை, கன்னிகை இவைகளைக் கேட்பவனுக்கே கொடுக்க வேண்டும்" என்று சாண்டில்யர் கூறினர். "தானம் செய்யப்படுவது சொற்பமாயினும், அதிகமாயினும் மேன்மை யில்லை. பக்தி சிரத்தையுடன் கொடுப்பதினுலேயே பலனுண்டாகின்றது. தானத்துக்கு ஆறு அங்கங்களுண்டு. அவை கொடுப்

பவன், ஏற்பவன், சிரத்தை, தெய்வம், தேசம், கால மென்பனவாம். கொடுப்பவன் களங்க மற்றவனும் கொடுப்பதில் சிரத்தை யுள்ளவனுயு மிருக்க வேண்டும்; ஏற்பவன், யாசியாதவனும், வேத முணர்ந்தவனும், ஆஸ்திக புத்தியுள்ளவனும், ஏழையாயும் இருக்கவேண்டும். அன்னதானம் எல்லாருக்கும் செய்யலாம். நைமித்திக தானமும், காமிய தானமும் வேத முணர்ந்தவர்களுக்கே செய்ய வேண்டும். பொய் கூறுகிறவன், பேராசை யுள்ளவன், திருப்தி யில்லாதவன் இவர்களுக்குக் கொடுப்பது பலன் தாராது'' என்று தேவலர்கூறினர். ''ஜல தானம் உத்தமமென்றும், அதற் காகக்கிணறு குளங்களை வெட்டி வைக்கவேண்டும்'' என்றும் மனு கூறினர். ஆதலால் இகலோக பர வாழ்வுகளை விரும்புகிறவன் சற்பாத்திரத்தில் தானம் செய்ய வேண்டும்.

'' சற்பாத்திரமாவது - வேதம் வேதார்த்த மறிந்தவன், அத்துடன் நித்திய கர்மானுஷ்டானந் தவறுமல் நடப்பன் தானபாத்திரமாவான் '' என்று ஸ்மிருதிசாரம் கூறுகின்றது. ''ஒன்றுந் தெரியாத மூடர்களை விடப் படிக்கமாத்திரந் தெரிந்தவர்கள் உயர்வு; அவர்களைவிடப் படித்துப் பொரு ளுணர்ந்தவர்க ளுயர்வு; அவர்களைப் பார்க்கிலும் அதன் அர்த்த முணர்ந்த வர்களுயர்வு; அவர்களைவிடப் படித்து அறிந்து அவைகளின் அர்த்தங்க ளைப் பிறர்க்குத் தெளிவாய் விளக்கத்தக்கவர்க ளுயர்வு'' என்று ஸ்மிருதி யர்ணவம் கூறுகின்றது. வித்வானும், தர்மசீலனும், இந்திரியங்களை ஜயித்தவனும், பொறுமை, சத்தியம், நன்றியறிவு, வேதாத்தியயனம், நிலை பெற்ற புத்தி யிவைகளுடன் பிரமானுஷ்டான முள்ளவனுமே தானபாத் திரமா மென்று யமஸ்மிருதி கூறுகின்றது. நற்குலத்திற் பிறந்து, பாபத் திற்குப்பயந்து கர்மானுஷ்டானம் செய்பவன் தானபாத்திரமாம் என்றும், அவன் பெண்டிர் வழியில் நடவாதவனுயு மிருக்க வேண்டும் என்றும் பெரியோர்கூறுகின்றனர். தபசு, வித்தை இவ்விரண்டையும் உடையவனே தானபாத்திரமா மென்றும், இவ்விரண்டில் ஒன்று குறைந்திருந் தாலும் அவன் தானபாத்திர மாகானென்றும் யாக்ஞவல்கிய ஸ்மிருதி கூறுகின் றது. சிலர் தவம் செய்கிறவன்தான் தானபாத்திர மென்றும் வேறு சிலர் வேதமறிந்தவனே தானபாத்திரமா னென்றும் கூறுகின்றூர்கள்; ஆயி னும் பரான்னபோஜனம் செய்யாமலும், இழிந்தவர்க ளிடத்தில் ஒன்றும் வாங்காதவனு மெவனே அவனே தானபாத்திர மாவான் என்று சாதா தபஸ்மிருதி கூறுகின்றது. ''சீலம், சௌசம், அறிவு இம்மூன்றுடன்வேதா த்தியாயன முள்ளவனே தான பாத்திர மாவான். சீலம் அவனுடன் கூடவே வசித்தலாலும், சௌசம் நடக்கையைப்பற்றி நிற்கும்; அறிவு அவன் வசனங்களால் விளங்கும். ஆதலால் இம்மூன்றூலும் பரிட்சித்துத் தான பாத்திரத்தை நிர்ணயித்துக் கொள்ள வேண்டும்'' என்று தேவலர் கூறி ஞர். ''அப்பிராமணன், சுரோத்திரியன், வேதத்தை முற்றிலு மறிந்தவன் இவர்களுக்குக் கொடுப்பது முறையே சமம், ஆயிரம், அனந்தம் என்கிற பலனைக்கொடுக்கும்'' என்று கௌதமர் கூறினர். ''முதலில் குருவுக்குக் கொடுக்கவேண்டும், பிறகு பாத்திரமறிந்து பிறருக்குக்கொடுக்கவேண்டும்'' என்றும், ''குருவில்லாவிட்டால் அவர் புத்திரன், அல்லது அவரதுமனைவி, பெண், பௌத்திரன், தௌஹித்திரன், அவர்களில்லாவிட்டால் குருவின் குலத்திற் பிறந்தவன் இவருக்குக்கொடுக்க வேண்டும். இவர்களை விட்டுப்

பிறருக்குக் கொடுத்தவன் நரகத்தை யடைவான்" என்றும், தகப்பனுக்குக் கொடுப்பது நூறுபங்கு பலனையும், தாயாருக்குக்கொடுப்பது ஆயிரம் பங்கு பலனையும், புத்திரிக்குக் கொடுப்பது குறைவற்ற பலனையும், சகோதரி, சகோதரிமகன், மாமன், அத்தை, ஏழையான பந்துக்க ளிவர்களுக்குக்கொடுப்பது கோடிபங்கு பலனையும் அளிக்கும்! என்றும் வியாசர்கூறினர். "உபகாரஞ்செய்பவன், தீனன், அநாதன், சிஷ்டன் இவர்களுக்குக் கொடுபடுவது குறைவற்ற பலனைக் கொடுக்கும்; இராஜஹிம்சையால் சொத்து மனைவிகளை யிழந்து வருந்துகிறவர்களுக்குக் கொடுப்பது மகத்தான பலனைத் தரும்" என்று தக்ஷஸ்மிருதி கூறுகின்றது. விசனம், கசடன், தன் குடும்பரக்ஷணம் இவற்றினல் வருந்துகிறவர்களுக்கு அவசியம் கொடுக்கவேண்டுமென்று அவரேகூறினர்."தன்சமீபத்திலிருக்கும் தான பாத்திரத்தைவிட்டு வேறொருவனுக்குக் கொடுப்பானுனல் அவனும் அவனுடைய எழுதலைமுறைகளும் பாபத்தையடைந்து நரகில் வருந்துவார்கள். தன் சமீபத்திலிருக்கும் வித்வானை விட்டு, அயலூரிலிருப்பவனை யழைத்துக் கொடுப்பவன் ஜன்மம் கழுதையாய்ப்பிறப்பான். மூடன் சமீபத்திலும் வித்வான் தூரதேசத்திலுமிருந்தாலும் அந்தவித்வானுக்கே கொடுக்கவேண்டும். அதனுல் தோஷம் வாராது" என்று ஆபஸ்தம்பரும் சாதாதபரும் கூறினர். இதனுல் தானபாத்திரத்தை யறிந்து தகுந்த தேச காலங்களில் கொடுக்கப்படும் தானத்தினுல் கர்த்தா பாபத்தினின்றும் விடுபட்டுச் சொர்க்கத்தை யடைவான் என்று விளங்குகிறது. இதனுல் யாம் அறிந்து கொள்ளத்தக்கது வித்வானும் கர்மானுஷ்டான முள்ளவனுமே தானபாத்திரமாமென்பது. இவர்கள் வேதாத்தியாயனத்தினுலும் கர்மானுஷ்டானத்தினுலும் கொடுத்தவருடைய பாபத்தையு மெரித்து விடுவார்களென்பது நூல்களின் கருத்தாமென்பதே. வேதத்தில் பாபஹரமான மந்திரங்களும், சகல தேவ சொரூபங்களும், அவர்களுக்குரிய மந்திரங்களும், ஞானமும் கூறப்பட்டிருக்கின்றன. அவ்வேதத்தை இடைவிடாமல் ஓதுகிறவர்கள் அம்மந்திரங்களை ஆவர்த்தி செய்தும்தெய்வ சொரூபங்களைச் சிந்தித்தும் வருவார்கள். ஆதலால் அவர்களைப் பாவம் அணுகாது. அன்றியும் அவர்கள் பரிகிரக தோஷ நிவிர்த்திக் குரிய பிராயச்சித்தங்களை யுணர்ந்து பரிகாரமும் செய்து கொள்வார்கள். ஆதலால் எந்தப்பாப நிவிர்த்திக்காகத் தானங்கொடுக்கப் படுகிறதோ, அந்தப்பாபத்தை நெருப்புத் துரும்பை யெரிப்பதுபோல் எரித்து விடுவார்கள். அதனுல் கொடுத்தவனும் தன் பாபத்தினின்றும் விடுபடுகிருன். வாங்கினவனும் வாங்கின பாபத்தி -னின்றும் விடு படுகிருன். இதனை யறிந்து தானம் செய்ய வேண்டு மென்பதற்காகவே தானம் தான பாத்திர மிவற்றை நூல்முறை கொண்டு விரித்தோம். இக்கலி காலத்திலும் வைதிக முறை பற்றி யொழுகுவோர் அநேக ராதலால் அவர்கள் முறை யறிந்து செய்து கொள்ளும் பொருட்டே விரிக்கப் பட்டது.

இனி இந்தத் தானத்திற்குத் தேசமும் காலமும் வேண்டும். புண்ணிய க்ஷேத்திரங்களும் புண்ணிய தீர்த்தக் கரைகளுமே யிடமாம். தெய்வ சந்நிதியுமாம். காலமோ பல. அவை அர்த்தோதயம், மஹோதயம், அயனப் பிறப்பு, மாதப் பிறப்பு, விஷு, அமாவாசை, பூர்ணிமாவாசை, சூரிய சந்திரக் கிரகண காலம், முதற் பலவாம். அர்த்தோதய, மகோதயம் முன்னமே கூறப்பட்டன. அயனப் பிறப்பு என்று உத்தராயண தக்ஷிண

யனப் பிறப்புக் காலங்களாம். உத்தராயணம் தேவர்களுக்குப் பகலென்றும், தக்ஷிணயனம் இரவென்றுங் கூறப்படும். இரவு சந்திரனுக் குரியது. பகல் சூரியனுக் குரியது. இக்காலங்களின் ஆரம்பத்தில் செய்யப்படுந் தானம் சிரேஷ்டமான தென்று நூல்கள் கூறுகின்றன. இக்காலத்தில் விசேஷமாய்ப் பிதிர்த் தேவர்களை யுத்தேசித்துத் தர்ப்பணுதிகள் செய்து தானம் கொடுப்பது முறை. இதில் பிதிர்க்களும், தேவர்களும் திருப்தியடைகிறார்கள். அமாவாசை பூர்ணிமாதிதிகளும் அவ்வாறேயாம். இதில் யாருக்கும் சந்தேக மிருப்ப தில்லை. ஆதலால் அதை விடுத்துக் கிரகண காலத்தைச் சிறிது கவனிப்பாம்.

கிரகண காலமென்பது சூரிய சந்திரர்கள் மறைபடுங் காலமாம். மேகத்தினல் சூரிய சந்திரர்கள் மறைபடுவது போலவே கிரகண காலமுமாதலால் இதில் விசேஷம் யாது? சூரிய சந்திரர்களை இராகு கேதுக்களென்னும் பாம்புகள் விழுங்குகின்றன வென்று, கூறுவ துண்மையோ? இக்காலத்தில் என் உபவாச மிருக்க வேண்டும்? தான தர்ப்பணங்கள் செய்வானேன்? அவற்றால் பயன் யாது? என்பது பெருஞ் சந்தேகமாம். இதில் சம்சயப்படுகிறவர்கள் நாஸ்திகர்களும் புற மதஸ்தர்களுமாம். அதனல் பல பல யுக்திகளடங்கிய கேள்விகள் கேட்கப் படுகின்றன. அக்கேள்விகளால் ஆரியர்களிலும் பலர் மயங்குவார்கள். அது பற்றிக் கிரகண காலத்தைப் பற்றிச் சிறிது ஆராய்ச்சி செய்வாம்.

முன்னமே சூரிய கிரகணங்கள் வெப்பமுடைய தாதலால் அது விஷமுடைய தென்றும், குளிர்ச்சி யுள்ள சந்திர கிரகணங்கள் அமுதமயமா மென்றுங் கூறினேம். இதைக் கவனத்தில் வைக்கவேண்டும். இராகு கேதுக்களென்பன சாயா கிரகங்க ளென்னப்படும். அதாவது நிழல் சொரூபம் எனவே அவற்றுக்கு ஒரு தனி வடிவம் கிடையாது. இதனலேயே கேரள ஜோதிஷ சாஸ்திரத்தில் இராகு கேதுக்களை நீக்கிச் சூரியாதி ஏழு கிரகங்களைப் பற்றியே பலன் கூறப்படுகின்றது. பாம்புகளென்பன சாயையாதலால், அவை கிரகங்களாகா வென்பதே அதன் கருத்து. அவை யவற்றின் நிழல் என்றால் பூமி சந்திரன் இவற்றின் நிழலேயாம். அந்நிழல் பாம்பைப்போலிருக்கும். பூமியிலோ சந்திரனிலோ இருந்து வருகிற நிழல் அவற்றின் சமீபத்தில் அதிக விசாலமாய்ப் பரவி யிருக்கும். கீழே போகப் போகக் குறுகிச் செல்லும். போகப் போகக் குறுகுதலால் அது பாம்பைப் போல தலைப்புறம் பருத்துப் கீழ்ப்புறம் சிறுத்தும் பாம்பைப்போல நீண்டிருக்கும். நுனி எலியின்வாலைப்போலச் சிறுத்துக்கடைசியில் நிழலேயில்லாமற் போம். அதிகாலத்துச் சோதிடர் இதனை உவமை பற்றிப் பாம்பு என்று கூறினர். கவிவாணர்களும் காவியகர்த்தர்களும் தங்கள் வர்ணனைக்கு யோக்கியமா யிருப்பது பற்றிப் பாம்பென்றே சாதித்து அதன் குணம் தொழில் சொரூபம் முதலியவற்றைப் புகழ்ந்து பேசினர்கள். சோதிடம் முதலிய சாஸ்திர வாராய்ச்சியும் அதிற் பயிற்சியுமற்றுப் போனபின் உள்ளவர்கள் அவற்றைப் பாம்பென்றே நிச்சயித்து விட்டார்கள். (தொடரும்)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## கைவல்ய நவநீத வசனம்

(58-ம் பக்கத் தொடர்ச்சி.)

இவ்வாறு ஜீவன் முத்தர்கள் நாலு பேதமான விவகாரங்களையுடைய வர்களாகத் தோற்றப் படினும், இவர்களடைந்துள்ள ஞானத்திற் றாரதம மியமில்லை யாதலின், இவர்களுடையும் முத்தி ஒரு தன்மைத்தே யாகும். ஆனால் பிரம வித்து இல்லறத் திருப்பவனாதலின் சாக்ஷி மாத்திரமா யிருப் பினும் வாகியப் பிரவிர்த்தி அடிக்கடி யுண்டாகிப் பற்றின்றி யேனும் விவ காராதிகளைச் செய்கிறான். வரன், வரியான், வரிட்டன் என்ற மூவரும் சமாதி நிலை யுற்றிருக்கிறார்கள். இதனால் பிரம்ம வித்தின் ஜீவன் முத்தத் தன்மைக்குக் குறைவுண்டாகாதோ வெனின்,உண்டாகாது.ஆனால் பின்னை மூவரும், ஆக்கையுட னிருப்பதும் போவதும், தேக மிசைத்துயில் கழிவது மிருப்பதும் கூட உணராராகிச் சதா பிரம்மானந்த சுகத்தை யனுபவித்துக் கொண்டிருப்பார்கள். அவர்களைப் பகிர் முகப் பிரவிர்த்தி யடையச் செய் யப் போதுமான பிராரப்தப் பலனில்லை. பிரம்ம வித்துக்கு வாகியப் பிர விர்த்தி யுண்டாகி அவன் விவகாரங்களைச் செய்வதால் (சீவன் முத்தத் தசையில்) மற்றை மூவர்க்கு முள்ள பிரம்மானந்த சுகம் அவனுக்குக் குறைவு படும். அவ்வளவே யன்றி அவனுடைய ஜீவன் முத்தத் தன்மை க்கு அது கேடு செய்யாது. விதேக முத்தியில் மற்ற மூவரானடையும் நிலை யையே யிவனு மடைவான்.

அந்தப் பிரம்ம வித்து சாக்ஷி மாத்திரமாக விருந்து விவகாரம் செய் பவனாதலால் தாமரை யிலை நீர்போல் உலகிற் கூடி யிருப்பினும் அன்னி யர் துக்கத்தைக் கண்டு தான் துக்கித்தல் முதலிய சீவகாருண்யமான செய்கைகளால் வேதனை யுறநேரலால் "பெரிதான திருஷ்ட துக்கம் பிரம்மவித் தனுபவிப்பான், வரியனும் வரனுமற்றை வரிட்டனுஞ் சுகமா வாழ்வார்" என்று கூறப்பட்டிருக்கிறது. "வேறொன்றை யொருவர் கொல்லின் அன்னோர மையோ வென முகம் வாடி நிற்பதுவு மையநின்னரு ளறியுமே" எனத் தாயுமானவா கூறியதே யிதற்குத் திருட்டாந்த மாகும்.

பிரம்ம வித்துக் குண்டாகும் சுக துக்காதி போகங்களில் யாவும் பிரா ரப்த பலனே யாகும். பிராரப்த பலனால் இச்சையும் எழலாகும். பிராரப்த போகத்தை யனுபவிக்கச்செய்யஎன்னென்னசாமக்கிரியைகள்அவசியமோ அவற்றை யெல்லாம் பிராரப்தமே யுண்டுபண்ணு நிற்கும். ஆதலின் அவன் ஞானநிலையை யவை கெடுக்கா; அவனுடைய முத்திக்கு அவை விரோதி யாகா. அவற்றால் அவன் ஜீவன் முத்தத் தன்மை கெடாது, சாக்ஷி மாத்திர மாக விருந்து தொழில் புரியும்போது பற்றில்லை யேனும் திரிபுடி யுண்டு. சத்துவ குண மாத்திரமாகச் சேஷித்த மனமிருந்தே தொழில் புரியவேண் டும். மன மொழிந்த நிலையாகிய ஏகாக்கிர சித்த நிலையிலேயே ஞான சுக முண்டாகும்.

இதன் கருத்தாவது நால் வகையான ஜீவன் முத்தரும் முடிவில் ஒரே வித மோட்சத்தை யடைவர். சீவன் முத்தித் தசையில் அவரவர் சித்த விருத்தியின் பேதத்திற்குத் தக்கபடி அவர்கள் அனுபவிக்கும் பிரம்மானந்த சுகம் ஏற்றத் தாழ்வுடையதாகும் என்பதே.

சீடன்:— மெய்ஞ்ஞான தேசிகரே! ஜீவன் முக்தர்களும் ஞானத்தை யடைந்திருந்தும் கர்மங்களில் உழலும் அஞ்ஞானிகளோடு கலந்து அவர்களைப் போன்றே பிரபஞ்ச விவகாரங்களை யாடம்பரமாகச் செய்தால் அவித்தையாகிய இச்சை, கர்மங்கள் ஒழிந்து பிறகு முக்தி யெவ்வா றடைவார்கள்?

ஆசான்:— ஆகாயம் தவிர மற்ற நான்கு பூதங்கள் ஒன்றோடொன்று கலந்தால் சேர்ந்து உறவாகி விடுவதுபோல், அஞ்ஞானிகள் நாம் தேகத்தோ டிருக்கிறோம், கர்மம் செய்கிறோம், சுகதுக்கங்களை யனுபவிக்கிறோம் என்ற அஞ்ஞான உணர்ச்சி யுடையவர்களாய் விவகாரங்களைச் செய்தால் ஆகாமியத்தை யுண்டாக்கிக் கொண்டு பிறப்பிறப்பை யடைந்து வருந்தா நிற்பர்.

ஜீவன் முக்தன், தான் பிரத்யகாத்மாவாகிய சாக்ஷியென்பதை யனுபவமா யறிந்து அந்த நிலையிலிருப்பவ னாதலால், தனக்குத் தேக முண்டென்றும், தான் கருமம் செய்வ தென்றும், தன்னோடு சம்பந்தப்பட்ட பொருள் ஏதேனு மிருக்கிற தென்றும் எள்ளளவும் கருதாத் திட நிலையி லிருந்துகொண்டு, வலிய வரும் பிராரப்த போகத்தைத் தானென்ற உணர்ச்சியின்றி அனுபவிப்பவன். ஆகாயம் மற்ற நான்கு பூதங்களோடும் கலந்திருந்த போதிலும் எதிலும் தாக்கற்று நிற்பது போல் ஜீவன் முக்தனும் தொழில்செய்வதுபோல் வெளிக்குத் தோன்றினும் உள்ளத்தில் எவ்விதப் பலனையும் இச்சியாது எதிலும் தாக்கற்று நிற்பவன். அவன் சாட்சி மாத்திரமாக விருந்து தொழில் புரியினும் அச்செய்கை கனவு போல அவன் மனதிற் பற்றாதுபோம். எனெனில், தன் சொந்தப் புருடனோ டிருக்கும் போதும் ஒரு சோரஸ்திரீ எவ்வாறு தன் கள்ள நாயகன் மேலேயே சித்தத்தைச் செலுத்தி நிற்பாளோ அவ்வாறு இவனும் சாக்ஷியா யிருந்தாலும் இவன் உள் நாட்டம் தானற்ற ஐக்கிய நிலையையே நாடிக்கொண் டிருக்கும்.

காயத்தில் வெறுகத் தன்னைக் கண்டோர்
 காயமீ றினுமறியான் கன்னற் கட்டி
தீயிற்கா யினுமரிந்த போத மின்பர்
 தீராத வாறுபோற் றெளிந்த ஞானி
மாயதனின் மோகத்தாற் பேத மாகான்
 மணந்தபர புருடன்மேல் மனஞ்சேர் மங்கை
போற்றான் மனைத்தொழில்கள் செய்யு மாபோ
 லிகழ்தொழிற்செய் யினும்பத்தி னிலைமை நீங்கான்.

(வாசிட்டம்)

மேலும், அஷ்டாவக்கிர கீதையில்,

"நினைப்பெல்லாம் விட்டு நீந்த் தொந்தனாய் ஞான சீலனாய இருக்கின்றவனுக்குத் தனக்குத் தானே வந்த போகத்தில் சுக துக்கங்களில்லை" என்றும்,

"பிரம்ம ஞானியைப் புண்ணிய பாவ பலன்கள் தொடர மாட்டா; நிர்மலாகாசத்தைப் புகை தொடாதது போல்" என்றும் கூறப்பட்டிருக்கிறது.

ஏனெனில், அவன் அஞ்ஞானிகளைப்போல் ஜீவபாவங்கொண்டு பலனையாசித்துத் தானே எதையும் செய்வதில்லையாதலின். அவன்செயல்கள் யாவும் பிராரப்தப் பலனைப்பொருந்தியவைகளே. அப்பலன் வறுத்த விதைபோல் போசிப்புக்கு மட்டுமே தகுதியுடைய தன்றிப் பாப புண்ணிய கர்மங்களைச் சனிப்பிக்கச் சக்தி யுடையதல்ல.

“வறுத்தவிதை யுண்பதன்றி மாநிலத்தைக் கீன்று
செறுத்துவிதைப் பாரோ தெளி” (வள்ளலார்—பாசவியல்.)

(சீவன் முத்தர்களின் மகிமை.)

குரு பின்னும் சீடனை நோக்கி,

“அன்புள மகனே, சீவன் முத்தரைச் சேவித்தோர் அரன், அயன், அரி என்னும் மும்மூர்த்திகளும் மகிழ்ச்சியடையும் வண்ணம் அரிய தவங்களை யெல்லாம் செய்து சன்ம சாபல்லியம் பெற்றவர்களாவார்கள் என்று வேதம் கூறுகிறது. இனி இத்தகைய சீவன் முத்தர்கள் அடையும் விதேக முத்தியாகிய கைவல்யப் பேற்றைக்கூறுகிறோம் கேட்பாயாக,” என்றனர்.

தவம் செய்து திரிமூர்த்திகளில் ஒருவரைத் தரிசித்தால் வரங்கள் முதலிய சித்திகளையும் புண்ணியத்தையுமே பெறலாம். மேற்படி மூவர்க்கும் காரணமாய பரப்பிரம்ம சொரூபமே தானாகிற்கும் ஞானியின் தரிசனத்தால் வரங்கள் முதலியவற்றோடு குரு உபதேச மூலமாய்ப் பேரின்ப முத்தியும் அடையலாகும். இதனாலும் அறிவாற் செய்யத்தக்க எல்லாத் தொழில்களையும் விடப் பிரம்மஞானம் பெறுதலே மிக்க கஷ்டமானதாலும் ஞானிகளின் மகிமை யளவிடற் கரியதெனப் பழமறை முழங்காநின்றது. ஒருவன் தான் செய்த காரியத்தைப்பற்றி பிரமாதமாகக் கூறும்போது “என்னடா பிரம்மவித்தை கண்டு பிடித்துவிட்டாயோ?” என்று உலகர் கூறுவது அனுபவம். மேலும் கீதையில் கண்ணபிரான், பிரம்மஞானசாதகம் யாதினும் வருத்தமானதென அருளியிருக்கிறார். இனையவற்றானே ஜீவன் முத்தனுக்கு இத்தகைய மகிமை கூறப்பட்டது.

“திரிவித வுலகத் தரிதொரு ஞானி
தேர்விடத் தென்றுமோ ரொன்றை
யுரைசெயிற் பிரம வித்தையொத் தரிதோ
வென்றுமிவ் வுலகுரைப் பதனா
லரிசொல்கீ தையினும் பிரமசா தகரி
னார்க்குள வருத்தமென் பதனாற்
பெரியதோர் வருத்த மெனமறை துணிந்தப்
பிரமநா னெனவிருந் தவனே.” (வைராக்கியதீபம்)

(ஒருவன் மோக்ஷத்தை யடையவேண்டின் ஆகாமியம், சஞ்சிதம், பிராரப்தம் என்ற மூவகைக் கருமங்களும் ஒழியவேண்டும். ஆதலின் விதேக முத்தியைப்பற்றிக் கூறுமுன் சீவன் முத்தர்களுடைய மூவிதக்கன்மங்களும் ஒழியும் வகையை ஆசான் கூறுகிறார்.)

1. சஞ்சித வினைகள். — பருத்திப் பொதியில் தீப்பற்றினால் அது எப்படி எரிந்து நீறாகி உருவின்றி யழியுமோ, அவ்வாறே ஞானியின் சஞ்சிதமனைத்தும் குரு உபதேசத்தா லுண்டான ஞானாக்கினியால் சுட்டெரிக்கப் பட்டழியும்.

" சஞ்சிதமுன் கட்டுவினை சற்குருநோக் காற்சரியும்
பஞ்சமலை பட்டநெருப் பாய்." (வள்ளலார்-பாசவியல்)

2. ஆகாமியம்.—சீவன் முத்தன் யாவும் சிவச்செயல், தன்னாலாவதொன்று மில்லையென்று தற்செயலற்று நான் எனதென்ற பற்றின்றி நிகழ்பவனாதலால் அவனிடம் வினைபற்றுவதில்லையாகும்.

" கொடுப்பானு மீசனதைக் கொள்வானு மீசனெனின்
மடுக்கா வெதிர்வினைகள் வந்து"

" வெறுப்புவிருப் பாற்பிறப்பா மேலை யாகிப் போமத
வெறுப்புவிருப் பற்றால் விடும்" (வள்ளலார்-பாசவியல்)

3. பிராரப்தம்.—முன்செய்த வினையாகிய பிராரப்த பலனை ஞானியுங் கூட அனுபவித்தே தீரவேண்டும்.

" உள்ளப் பொசிப்பெல்லா முண்டொழிப்ப நன்றியைத்
தள்ளப் படாதெவர்க்குந் தான்" (வள்ளலார்-பாசவியல்)

ஞானிபடம் பிராரப்தத்தை யனுபவிக்கிறான் எனில், சாதாரணமாக அஞ்ஞானிகள் அனுபவிப்பதுபோல "இது நான் பூர்வம்செய்தவினை யாதலின் என் கன்மத்தை நான் அனுபவிக்கிறேன்" என்ற உணர்ச்சியோடனுபவிப்பதல்லை உண்மையில் ஞானியின் ஆன்மாவில் தான் என்பதும் ஒன்றை அனுபவிக்கிறோம் என்பதும் ஆகிய இத்தகைய உணர்ச்சிகளோ வில்லை. ஆகையால் அனுபவத்தில் நமக்குப் பிராரப்த முளது அதையனுபவிக்கிறோம் என்ற உணர்ச்சி சீவன் முக்தனுக்கில்லை. உண்டேல் அவன் நிலை சரியான சாக்ஷிமாத்திர நிலையாகாது.

எப்போது தொம்பதம் தரிசனம் உண்டாகிறதோ (அதாவது தன்னை யறிந்து சாக்ஷிமாத்திரமாய் நிற்கிறானோ) அப்போதே ஆகாமியம் ஒழியும். பிறகு எப்போது தத்பததரிசன முண்டாமோ, (அதாவது அருள் நாட்டமுற்று சிவோகம் (அகம் பிரம்மாஸ்மி) பாவனையால பிரம்மத்தை யன்றி நாம் வேறில்லை. அதுவே நாமென்ற நிலையில் நின்று, அகண்டாகாரவிருத்தியில் தன்னை இலயப் படுத்தத் தொடங்குகிறானோ) அப்போதே ஞானக்கினியால் சஞ்சிதம் எரிக்கப்பட்டுப்போம். பிறகு அசிபத தரிசன முண்டாயின் (அதாவது முடிவாக அகண்டாகார விருத்தியில் தன்னை யடியோடிழுந்து தானற்றுச்சக சமாதி நிலை யடைகிறானோ) அப்போதே பிராரப்தமும் ஒழிகிறது.

பின்னை நூலல் "பிராரப்தய ஞானியும் அனுபவித்தே தீரவேண்டும்" என்று கூறிய தென்னையெனின்,

" வினைப்போகமே யொருதேகங்கண்டாய
வினைதானொழிந்தால் தினைப்போதளவு நில்லாது கண்டாய்"

என்றதுபோல் பிராரப்தம் தேகத்தைப் பொருந்தியது. அஞ்ஞானதசையில் சீவபாவத்தால் தேகத்தின் செயல்களை யெல்லாம் தன் செயல்களாக மயங்கிக் கருதியவன், ஞான நிலையில் தேகத்திற்கும் தனக்கும் சம்பந்தமில்லை யெனவிட்டுவிட்டதால், ஜீவன்முத்தனது ஆன்மானுபவத்தில் அப்பிராந்தியில்லை. [illegible] அவ

னுடைய திருட்டியில் தான் புசிப்பதாகிய பிராந்தியில்லை. பின்னை யெவ்வாறு அனுபவமெனில், எதிர்நிற்கும் மனிதன் ஒரு குடத்தில் தானியத்தைப் பெய்வதை, அது நிரம்பிற்றோ இல்லையோ என்பதைக் கூடக் கவனியாது சாடையாய் பார்த்துக்கொண் டிருப்பவன் அனுபவமே ஜீவன் முத்தனுக்கு உள்ள அனுபவம். கருவிகாரணங்களற்றுச் சிந்தனையற்று நிர்ச்சிந்தனாய் காலதேசாதிகளற்ற நிலையில், ததாகாரமாய் உள்ள நிலையில், நித்திரையி லிருந்து எழுப்பி அன்ன மூட்டின் உண்டு, காலையிலெழுந்து எனக்கு அன்னமளிக்கவே யில்லையென்று கூறும் குழவி எந்நிலையிலிருந்து அவ் வன்னத்தை யுண்டதோ அவ்வாறு (ஆனால் அஞ்ஞானம் நீங்கிய) நிலையினின்று பிராரப்தத்தைக் கழிக்கும் ஜீவன் முக்தனுக்கு பிராரப்தத்தை யனுபவிக்கிறோம் என்ற உணர்ச்சியே யில்லை. உண்டாமாயின் பின்னையும் பிராரப்தத்தை யனுபவிக்க நேரிடும் என்க.

"தொம்பதம் விளங்கின் மேல்வினை மறைந்த
தொல்விரு ளகன்றுபோ யொளிக்கும்
தம்பதமான தற்பதம் விளங்கில்
சஞ்சித மாயைபோ யொளிக்கும்
அம்பத மான வசிபதம் விளங்கி
லரும்பிரா ரத்தம்போ யொளிக்கும்
செம்பர வருளே வடிவதா யான்மா
சிவத்தினுக் கங்கமாய் நிகழும்.

பிராரத்த முடன்பா டென்றெந்த நெறியும்
பேசிடு மிந்நெறி யதற்குப்
பிராரத்த முடையோ ரருவரே யன்றும்
பிராரத்தம் புசித்திடு வோர்கட்
கருத்தித மாயா தநுகரணங்க
ளதனினால் சிவத்துவ மதனை
யுறுதுமற் றவரைச் சீவன்முத் தர்களென்
றுரைத்திடப் படுவதெப் படியோ. (குமாரதேவர்)

(தொடரும்) சீடன்.

---

## ஸ்திரீகள் பக்கம்

நம் இந்தியமாதர்களுக் கோர்விண்ணப்பம். சகோதரிகளே,

மேனாட்டு நாகரீகத்தினால் நம் தாய்நாடு வரவரச் சீர்குலைந்து வருகிற சங்கதி உங்களி லெல்லோருக்கும் பிரத்தியக்ஷமாகத் தெரிந் திருக்கலாம். நம் இந்தியதேசமோ குலமாதர் பாதுகாப்பில்தா னிருக்கின்றது. அவர்களும் நம் ஆடவர்களைப்போல் ஆசாரங்கெட நடப்பார்களே யாமாயின், நம் தாய்நாட்டின் கதி இன்னதுதானாகுமென்று நாம் நினைக்கக்கூடச் சாத்திய மில்லாமலிருக்கிறது. ஆனதினால் நம் இந்தியதேசத்தின் க்ஷேமத்தை அனுசரித்தும், குலவிருத்தி குடும்ப விருத்தியைக் கோரியும் நான் உங்களிடத்தில் வேண்டிக்கொள்வது அடியிற் கண்டவைகளே.

1. குலமகளுக்குரிய அரிய பூஷணங்கள் நாணம், மடம், அச்சம் பயிர்ப்பென நான்குண்டு. நாணம் என்பது வெட்கம், மடமென்பது எல்

லாம் தெரிந்தும் தெரியாதுபோ லிருத்தல். அச்சம் என்பது புருஷனை யன்றி வேறு ஆடவர்களைக் கண்டவிடத்து அஞ்சுதல். பயிர்ப்பு என்பது தன் கணவனைத் தவிர வேறு புருஷர் கை தன்மேல்படின் உடம்பு அருவருத்தலாம்.

2. குலமகளின் விசேஷமான குணம் தெய்வபக்தி. கணவனே அவளுக்குக் கடவுள். நாம் சதா கடவுளுக்கு முன்பாக இருக்கிறோ மென்றும், நாம் செய்யும் ஒவ்வொரு காரியங்களையும் அவர் பார்த்துக்கொண் டிருக்கிறா ரென்பதையும் கவனித்து நடத்தல் வேண்டும். சதாபக்தி ஒழுக்கமும் பூண்டு எவ்விதத் துர்க்குணங்களுக்கும் இடங்கொடாமல் சர்வேஸ்வரனுடைய ஆசீர்வாதம் தன்பேரிலும் தன்னைச் சார்ந்தோர்களின் பேரிலும் தன் குடும்பத்தின் பேரிலும் வரும்படி பிரார்த்தித்தல் வேண்டும்.

3. ஸ்திரீகளுக்கு விசேஷித்த ஆபரணம் கற்புநிலையே. இதையறிந்தே தானே "பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந் - திண்மை யுண்டாகப் பெறின்" என்றார் திருவள்ளுவ நாயனார். சீதை, சாவித்திரி சத்தியவான், நளாயினி, தமயந்தி இவர்களினரிய சரித்திரங்கள் இக்குணத்தை விசேடிக்க வில்லையா. கற்பழிந்தஸ்திரீ எல்லோராலும் இகழப்படுவாள். அவள் தன் புருஷனுக்குத் துரோகியாவது மன்றி, தன்னைச் சார்ந்தோர்களுக் கெல்லாம் என்னாளும் நீங்காப்பெருங்கேட்டை உண்டுபண்ணுகிறாள்: பதிவிரதா பங்கத்திற்கு பரிகாரமே கிடையாதன்றோ! "அரைக்காசுக் கழிந்த கற்பு ஆயிரம் பொன் கொடுத்தாலும் வருமா?" சோரத்தனத்திலுண்டாகிற இன்பம் இன்பமாகுமோ! ஆபத்துகளும், பழிகளும் பாவங்களுமே அதன்பயன். "சிறைகாக்குங் காப்பெவன் செய்யுமகளிர்-நிறைகாக்குங் காப்பே தலை" என்றபடி ஒரே வைராக்கியத்துடன் தன் கற்பைக்காத்துத் தனக்கு கீர்த்தியும் புருஷனுக்கு மகிமையும் சம்பாதித்தலே குலமாதின் கடமை.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்—பெய்யெனப் பெய்யுமழை."

4. அவசியமான தின்னதென்று கூடிநீதனப் பாங்கு அறிந்து, புருஷன் வருமானத்திற் கேற்ற செலவு சிக்கனமாய்ச்செய்து; கொண்ட கணவனை மகிழ்வித்தல், வரவு செலவுகளை விடாமல் கணக்கெழுதிவைத்தல், ஆகிய கடமைகளைத் தவறாதுசெய்து, 'கடனில்லாச்சோறு கால்வயிறு போதும்' என்கிற பழமொழிக் கிணங்கி நடக்கவேண்டும்.

ஆகையால் கணவனுக் கினியவளாயும், மிருதுபாஷியாயும், காய்சினமிலாளாயும், நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென நான்கு குணங்களும் பொருந்தினவளாயும், மாமிமாமனுக்கு இதஞ் செய்பவளாயும், வரும் விருந்தினர்க்கு மனங்கோணாமல் உபசரிப்பவளாயும், கணவன் சொல்வழி நிற்பவளாயும், பிறர்தம் மில்வழிச் செல்லாதவளாயு மிருப்பவளே நற் குணமடந்தையென ஆன்றோர் கூறியுள்ளார்.

இப்படிக்கு

வே. பா. குப்புசாமி B. A.

ஸப்ரிஜிஸ்ட்ரார், கொள்ளேகாலம்.

## முதலுக்கே மோசம்

(77 - ம் பக்கத்தொடர்ச்சி)

நேயர்களே! இவ்விஷயத்தை வாசிக்கத் தொடங்குமுன் தயைபுரிந்து இது விஷயமாகக் கடந்த சஞ்சிகையில் நாமியம்பியுள்ளதை யின்னொரு முறை வாசித்துவிட்டுப் பிறகு தொடர்ச்சியாக இதை வாசிக்கவேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறோம்.

நமது மதத்திலிருந்து அன்னிய மதத்திற்குச் செல்வோர் நமது மதத்தில் மோக்ஷமார்க்கம் இல்லையென்றும் அந்த அந்நிய மதத்தில்தான் உண்மையுண்டென்றும் உணர்ந்து செல்வதில்லை யென்பது பிரத்யக்ஷ அனுபவம். நம்மவர்க்கு சுயமதக்கல்வி யில்லாததால் அவர்கள் சரியை கிரியைகளின் அந்தரங்கம் தெரியாதவர்களாய் இருக்கிறார்கள். அந்நிலையிலுள்ள பாமரருக்கு "நீங்கள் கல், செம்பு இவற்றால் மனிதன் செய்த உருவங்களைக் கும்பிடுகிறீர்கள். அவைபேசுமா? நாம்கூறும் பிரார்த்தனைகளைக் கேட்குமா? கடவுளும் நம்மைப்போல் மனைவியை யுடைத்தா யிருக்கலாயா? * * " என்பது முதலான வீண்வார்த்தைகளைக் கூறினால் அவர்கள் நம்மதத்தில் ஒருவிதத்தாழ்வு அபிப்பிராயங் கொள்ளும் மயக்கத்திற்குள்ளாகிறார்கள். அவ்வளவே உள்ள விஷயம். நமது மதத்தில் உண்மையில்லை, அந்நியமதத்தில் உண்மை யிருக்கிறது என்று உணரக்கூடிய மனோ வல்லமை யவர்களுக்கில்லை. அவ்வளவு அறிவிருந்தால், "அய்யா குருவே! நீரும் எங்களைப்போல் மனைவி மக்களோடு கூடி உலகத்தில் எதிலும் வெறுப்புறா திருக்கிறீரே; உமக்கே ஆண்டவன் தரிசனங் கிடைக்காதே; நீர் எங்களுக்கெப்படிக் காட்டுவீர். உலக அற்பசுகங்களில் எதை வெறுத்தீர்?" என்று கேட்பார்க ளல்லவா.

மேல்கூறிய மயக்கநிலையில் கொண்டுவரப்பட் டிருப்பவர்களுக்கு உலக போகமான ஆசைகளைக் காட்டினால் அவர்கள் அடியோடு மயங்கி விடுகிறார்கள். இப்படி மயங்கிய கன்னிகையையோ வாலிபனையோ கள்ளத்தனமாக அவர்கள் குடும்பத்தி லிருந்து பிரித்து எங்கேனும் அழைத்துக்கொண்டுபோய் இரகசியமாக அன்னியரைத் தங்கள் மதத்தில் சேர்த்துக்கொள்ளும் சடங்கைச் செய்துவிடுகிறார்கள். இடையில் பெற்றோர் முதலியோர் அறிந்து தங்கள் பெண்ணையையோ பிள்ளையையோ காட்டவேண்டுமென்றால் "அவர்கள் உங்களைக் காணப் பிரியப்படவில்லை" என்பது முதலிய கள்ளச் சாக்குகளைக் கூறி அவர்களைக் காணவொட்டாமலே செய்து விடுவார்கள். இந்தச் சூதான கள்ள விவகாரங்களாலேயே, இவர்கள் சத்தியமாகமதத்தை அவர்கள் விரும்பும்படி செய்து அவர்களே பிரியப்பட்டு வந்தால் சேர்த்துக்கொள்ளுகிறார்கள் என்பது அடியோடு பொய்யென்று அங்கை நெல்லிபோல் விளங்குகிறது. மேல் கண்டவாறு பல திருட்டாந்தங்கள் நடந்திருப்பது யாவருமறிந்ததே. ஹிந்துமதத்தில் மோக்ஷமார்க்கம் இல்லை என்று அவர்க்கு நிரூபித்து அவர்களைத் தங்கள் மதத்திற்குவரும்படி போதிப்பதே கிடையாது. அப்படி நிரூபிக்க யாரால் முடியும்! உள்ளதை இல்லையென்று நிரூபிக்க எவனால்தாம்? அவ்வாறு கள்ளத்தனமாக அழைத்துக் கொண்டு போகப்பட்டவர்களுக்கு விவகாரதசை வந்துவிட்டால் அவர்கள் பிரியப்பட்டுவந்து விடார்கள் என்று கூறக்கூடிய சட்டத்திலுள்ள சாக்கு இவர்க

ளுக்கு உதவியாயிருக்கிறது. இன்றேல் இவர்கள் இன்னொருவர்-பெற்றோர் அல்லது புருடன்-ஆதரவை, அல்லது பாதுகாப்பில் இருக்கும் வாலிபன் அல்லது ஸ்திரீயைக் கள்ளத்தனமாய் அழைத்துக்கொண்டு போவதற்காக அரசரின் தண்டனைக் குள்ளாக்க வேண்டியவர்களே. நம் அரைத்தனத் தாரோ மதவிஷயத்தில் பிரவேசிப்பதில்லை. ஆயினும் சிலர் நமது மதத்தை யடியோடழிப்பதாகத் துசங்கட்டிக்கொண்டு நம் நாட்டிற்கு வந்து நமக்கு உயிரினும் சிறந்த பொக்கிஷத்தை யபகரித்துக்கொள்ள முயலும்போது, நமது அரசர் அதைத்தடுத்து நமக்கு உதவிசெய்யவேண்டியது அவசியமே யாகும். ஆனால் அதற்குமுன் நம்மாலானவரை நம்மை நாமே காப்பாற்றிக் கொள்ளத்தகுந்த ஏற்பாடுகளைச் செய்யவேண்டுவது நமது கடமை. பொது வாக நம்மவர் அன்னிய மதத்திற் போய் விழாவண்ணம் அவர்களைக் காப் பாற்ற என்ன செய்யவேண்டு மென்பதைப்பற்றி முன்பே நாம் சஞ்சிகை யில் வரைந்திருக்கிறோம். ஆயினும் நாம் இப்போது கூறுவதைத் தயை செய்து கவனித்து நமது மதத்தைக் காப்பாற்ற முயல்வீர்களென்று பூரண மாக நம்புகிறேன். இனியும், உடனே தக்கமுயற்சி யெடுத்துக் கொள்ளா மல், கதையைப்போல் இதை வாசித்துவிட்டுப் பேசாதிருந்தால் நாம் "பெரும்பாபத்திற் காளாவோம்; ஹிந்துக்கள் என்றபெயருக் குருகராகமாட் டோம். அநாதிகாலம் தொட்டு நம்பாரத நாட்டில் பொருந்தி யிருக்கும் தெய்வத்தன்மை நம்மேலிட்ட கொடுஞ் சாபமாக மாறிவிடும்" என்பது உண்மை. இப்போது நாம், செய்யவேண்டிய முயற்சிகள் இன்னின்ன வென்பதைச் சுருக்கமாகக் கூறுகிறோம்.

1. நமது மக்களுக்குத் தாய்ப்பாஷையில் மதக்கல்வியை ஆரம்பத்திலே யே போதிக்கவேண்டும்.

2. தாய்ப்பாஷையைப் பாடசாலைகளில் கட்டாயபாடமாகப் போதிக் கும்படிக்கு ஏற்பாடு செய்யவேண்டும்.

3. தாழ்ந்த வகுப்பாரை இழிவாக நடத்துவதை அடியோடு விட்டொழி த்து அவர்களை விசுவாசத்தோடு நடத்தவேண்டும். இவ்விஷ யத்தைப்பற்றி மிக்க விரிவாகக் கூறவேண்டி யிருக்கிறது. ஆனால் இவ்வமயத்தில் அவ்வாறுகூற இடமில்லை யேனும் இரண்டொரு விஷயங்களைப் பற்றியேனும் கூறவேண்டியது அவசியமாகிறது. இப்போது நாம் மதவித்தியாசத்தைக் கவனித்தல்ல அவர்களைத் தாழ்மையாக நடத்துவது. அவர்கள் நமது மதஸ்தரே. நமதுமதம் நமக்கு எவ்வளவு சொந்தமோ அவ்வளவு சொந்தம் அவர்களுக்கும் உண்டு. சத்தியோன் முத்திமார்க்கமாகிய ஞானமார்க்கம் தீண்டா தவர்க ளென்று கருதப் படுபவர்களுக்கும் சொந்தமானதே. நமது மதத்திலிருக்கும் போது நாம் அவர்களை யிழிவாக நடத்தி, அவர் களை கிருஸ்துமதத்தில் சேர்ந்து விட்டால், அப்போது அவர்கட்குச் சம மரியாதை யளிக்கிறோம். அப்போது மதத்தைக்கருதியா அப்ப டிச்செய்கிறோம்? ஒருகாலு மில்லை கிருஸ்துமதத்தில் சேர்ந்தபின் அவர்கள் சுத்தமான உடையுடுத்தி நாணயமாக ஒழுகக் கற்பிக்கப் படுவதோடு கல்விப்பயிற்சியு மடைகிறார்கள். இதுதான் அப்போது நாம்அ வர்களை மரியாதையாக நடத்துவதற்குக் காரணம். இப்

போது கொஞ்சங்கூடக் கல்வியாவது நாகரீகமாவது இல்லாததால் "எங்கள் மதத்தில் சேர்ந்து விட்டால் நாங்கள் யாவரையும் சமமாக நடத்துவோம். கோயிலில் யாரும்வந்து துதிக்கலாம். சாதி வித்தியாசமேயில்லை" என்று கூறுவதை யப்படியே யுண்மையென்று நம்பிக்கொள்கிறார்கள். உண்மையில் நமக்குள் ஜாதியில் உயர்வுதாழ்வு பாராட்டப்பட்டால் அவர்களுக்குள் கேவலம் அநித்தியமான பொருள், அந்தஸ்தால் வித்தியாசம் பாராட்டப் படுகிறது. திருட்டாந்தமாக ஐரோப்பியர்செல்லும் ஆலயத்தில்,ஈஸ்ட் இந்தியர் (நாம் சட்டைக்காரர் என்று கூறுகிறவர்கள்) சேர்க்கப்படுவதில்லை; அவர்கள் கோயிலில் இந்திய கிருஸ்துவர் சேர்க்கப்படுவதில்லை. இவர்களுக்குள் சமபோஜனம் முதலிய ஒன்றுமே கிடையாது. விரிக்கிற்பெருகும். அந்தோ நமதுநாட்டுக் கீழ்ஜாதியாருக்கு நாமேயேன் நாகரீகத்தையும் கல்வியையும் போதித்து அவர்களை அன்போடும் தக்க மரியாதையோடும் நடத்தலாகாது? இனியேனும் நம்மவர்கள் அவ்வாறு செய்யவேண்டியது அவசியம். தீண்டாதவர்களல்லாத மற்றவர்களில் தாழ்ந்த ஜாதியாரைக்கூட சற்று மேல் ஜாதியாகிய ஹிந்துக்கள் தங்கள் கோயிலுக்கு வாராது தடுத்தல், அவர்களைக் கல்வி கற்கவொட்டாமலும் நாகரீகமாக ஒழுகவொட்டாமலும் தடுத்துக் கட்டுப்பாடுசெய்தல் இத்தகைய பெரிய அக்கிரமச் செயல்களை யுடனே யடியோ டொழிக்கவேண்டும். இப்போது அம்மட்டோடு நிறுத்தி இவ்விஷயத்தைப்பற்றிப் பின்னால் விரிவாகக் கூறுவாம்.

ஆனால் இந்த மூன்று விஷயங்களும் ஒரே நாளில் நிறைவேறிவிடத் தக்கவையல்ல. இவற்றைச் செய்து முடிக்கக் கொஞ்சம் காலம் செல்லும். இதை மட்டும் செய்துகொண்டு வந்தால் இப்போது வரப்போகும் ஆபத்தைத்தடுக்க முடியாது. ஆகையால் அதைத்தடுக்க உடனே செய்து முடிக்க வேண்டியவேலைகள் இரண்டொன்றிருக்கின்றன. அவை நம்மவரில் வாசா கயிங்கரியமாகப் பேசுவது மட்டிலிராமல், அப்படியே சிரத்தையெடுத்துங் கொள்ளத்தக்க உண்மையான, உறுதியான தேசபக்தி மதப்பற்று இவற்றை யுடையோர் உடனே முயற்சி யெடுத்துக்கொண்டால் செய்து முடிக்கத்தக்கவைகளே யாகும். நமக்கு மதமே யாவற்றினும் சிறந்தது. முன்னோர்களாகிய தெய்வீகத்தன்மை பொருந்திய மகான்களின் இரத்தம் நம் தேகத்தில் துளியேனும் ஓடிக்கொண் டிருக்கிறது.ஆகையால் நாம்இவ் விஷயத்தில் கவனத்தைச் செலுத்தி நமது மதத்தைப் பாதுகாக்கா விடின் நாம் கடையரினும் கடையராவோம். இதைச்செய்ய மனஉறுதியே யன்றிக் காசு பணம் தேவையில்லை.

முதலாவதாக;—வெளிப்பகட்டில் மயங்கி நமது மக்களை, கட்டாயம் பெண் மக்களை அன்னிய மதஸ்தர் பாடசாலைகளுக் கனுப்பவே கூடாது. அன்னிய மதஸ்தரை நம் வீட்டிற்குவந்து நமதுபெண்களுக்குக் கல்வி போதிக்கும்படியாவது, தையல் முதலியவை கற்பிக்கும்படியாவது, பேசும்படியாவது ஒரு விநாடி கூட விடக்கூடாது. அவர்கள் "புத்தகங்கள், தையல் சாமான்கள் யாவும் நாங்களே இலவசமாக அளித்து பூநூலால் உயர்ந்த வேலை யெல்லாம் கற்பித்துத் தருகிறோம்" என்று

கூறுவார்கள் பணம் கூடத் தருகிறோம் உடை கூடத் தருகிறோம் என்பார்கள். இவற்றிற் காசைவைத்து அவர்களை வீட்டிற்கு வரும்படி அனுமதி யளித்தீர்களோ பிறகு மரண மட்டும் துக்கத்தை யனுபவிக்க நேரிடும். பெண்மக்களை உயிரோடு பறிகொடுக்க நேரிடும். மாதர்கள் சுலபத்தில் மயங்கி விடுவார்க ளாதலால் ஆடவர் இது விஷயத்தில் அவசியம் கண்ணோக்கம் வைத்து அப்படி நேரிடாதபடிக் கண்டிப்பான கட்டளை யிடவேண்டும்.

இரண்டாவது:—இவ்விஷயமும் மிக முக்கியமானது. நமது மதத்தை விட்டு அன்னிய மதத்தில் போய்ச் சேருகிறவர்கள் மத உண்மையை யறிந்து செல்பவர்களல்ல என்பதைப்பற்றி முன்னமே கூறியிருக்கிறோம். இதனால் அதில் போய்ச் சேருபவர்களில் முக்கால் பங்கிற்கதிகமாகப் பின்னால் பெருந்துக்க மடைகிறார்கள். தூரத்தில் சூரியப் பிரகாசத்தால் ஜொலிக்கும் கிளிஞ்சிலைக்காணும் ஒருவன், அச்சமயம் அது வெள்ளியே யென்று மயங்கி ஆவலோடு ஓடிப்போய் அதை யெடுத்துக் கொள்கிறான். அதன்பிறகே "அடடா! மோசம்போனேம்" என்று உணர்ந்து அவமானமும் துக்கமும் அடைகிறான். அப்படி அன்னிய மதத்தில் சேர்ந்தபின் தாங்கள் செய்தது மூடத்தனம் என்று உணர்ந்து வருந்தும் நம்மவர் கதியென்ன? அந்தோ நாம் அவர்களை மறுபடி சேர்த்துக் கொள்ளாமல் விட்டு விடுகிறோம். இதுவே நம்மவரில் பெரும்பாலார் அன்னிய மதத்திலேயே நிலைத்திருப்பதற்குக் காரணம். இதற்குப் பிராயச்சித்தம் செய்து சேர்த்துக் கொள்ள நமது சாத்திரங்களில் மார்க்க முண்டு. ஆனால் அம்மார்க்கம் மிக்க பணச்செலவுடையதும், கஷ்டமானதுமாக விருக்கிறது. மகம்மதியமஸ்த்தன் ஒருவன் அன்னிமதத்தில் சேர்ந்து திரும்பிவருவதாயின் கோயிலில் ஒரு சடங்குசெய்து உடனே மறுபடி தமது மதத்தில் அவனைச் சேர்த்துக் கொள்கிறார்கள். சடங்கு பிரதானமேயன்றி பணச்செலவு பிரதானமல்ல. "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவலகால வகையினானே" என்பதை யாதாரங்காட்டி, நமக்கு அனுவசியமான அன்னியநாட்டு ஆசாரங்களை யெல்லாம் பின்பற்றுகிறவர்கள், அந்தோ ! இப்போது வரும் ஆபத்தைக்கருதி கஷ்டமும் மிக்க பொருட்செலவும் வேண்டிய பிராயச்சித்த விதிகளை நீக்கி, மிக்க சுலபமாகச் சொல்ப செலவில் பிராயச்சித்தச் சடங்கைச்செய்து சேர்த்துக் கொள்ளும்படியான விதியை யேற்படுத்தவேண்டியது அவசியம். எண்ணிக்கையற்ற சிஷ்யர்களையும் ஏராளமான வரும்படியையுமுடைய சைவமடாதிபதிகள், வைஷ்ணவ மட ஜீயர்கள், இவர்கள், காலத்தை யனுசரித்து இத்தகைய முயற்சி எடுத்துக்கொண்டு நமது மதத்தைக் காப்பாற்றுவிட்டால், ஐயோ ! கொஞ்சகாலத்திற்குள் இவர்கள் பதவிகளே எக்கதி யடையும்? இதைக் கருதியேனும் இவர்கள் ஒன்றுகூடி பிராயச்சித்த விதிகளை மிக்க சுலபமாக அற்பசெலவில் நிறைவேறும் வண்ணம் செய்ய வேண்டியது அவசியமல்லவோ ? கிருஸ்துவப் பாதிரிமார் தங்கள் மதத்தை விர்த்திசெய்வதற்காகச் செய்யும் முயற்சிகளைக் கண்டும் இவர்கள் இன்னும் தங்கள் கடமையைச் செய்யாதிருந்தால் ஆண்டவன் தண்டனைக்குத் தப்பு

வார்களோ? நமது மதத்தைக் காப்பாற்ற வேண்டியது இவர்கள் கடமையல்லவோ! இனியேனும் ஞானவான்களாகிய இப்பெரியோர்கள் உடனே நமது ஒப்புயர்வற்ற உத்தம மதத்தைக் காப்பாற்ற முன்வந்து அவசியமான காரியங்களைச் செய்ய வேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறோம்.

காரைக்குட்டியில் தாபிக்கப்பட்டிருக்கும் ஹிந்து மதாபிமான சங்கத்தின் மூன்றாவதுவருட அறிக்கைப்பத்திரம் வரப்பெற்று மிக்கமகிழ்வடைந்தோம். தற்காலம் நமது நாட்டிற்கு இத்தகைய சங்கங்கள் இன்றியமையாதனவாகும். இத்தகையசங்கம் இப்போது நமது மதத்தைப்பாதுகாக்கத் தகுதியான முயற்சி யெடுத்துக்கொள்ள வேண்டியது அதன் கடமையாகும். இச்சங்க அவயவிகள் சபைகூடி நாம் எழுதியுள்ள விஷயங்களை வாசித்துப்பார்த்து, முக்கியமாய்க் கடைசி இரண்டு விஷயங்களாவது சீக்கிரத்தில் நிறைவேறச் செய்வதற்கான முயற்சி யெடுத்துக் கொள்வார்களென்று பூரணமாக நம்புவதோடு, அவர்களை மனப்பூர்வமாகப் பிரார்த்தித்து வேண்டிக் கொள்கிறோம். இதைவிடப் பரமசிவத்திற்கு நாம் செய்யத்தக்க தொண்டு வேறில்லையாகும். அகண்டபரிபூரண சச்சிதானந்த பரம்பொருள் இவ்விஷயத்தில் நமக்கு அருள் புரியுமாறு பிரார்த்திப்போமாக.

"ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே"

ஆ-போ.

---

## அந்தரக்களவு அல்லது தபால் கொள்ளைக்காரர்கள்

(77-வது பக்கத்தொடர்ச்சி)

இவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கையில், ஹோட்டல்காரனும் இரங்கநாதனும் ஏதோ ஆழ்ந்த சம்பாஷணையி லிறங்கி விட்டார்கள். வியாபாரம் நடக்கு மிடத்தில் ஆட்கள் அதிகமாய் வந்து விட்டதால் இருவரும் துப்பறியும் ஆசாமிகள் இருக்கும் அறைக்குப் பக்கத்தறைக்கே வந்து விட்டார்கள். இரண்டறைகட்கும் இடையில் வாயிற்படியில் ஒரு திரை விடப்பட்டிருந்தது. ஹோட்டல்காரனும் இரங்கநாதனும் துப்பறிவோர் இருக்குமிடத்திற்கு ஐந்தாறடி தூரத்திலேயே யுட்கார்ந்து சம்பாஷிக்கத் தொடங்கினார்கள்.

ஹோட்டல்காரனாகிய மார்க்கபந்து இரங்கநாதனை நோக்கி,

"நீ கூறுவது சரியே. நாம் மட்டும் சரியான வழியில் நடந்து கொண்டால் இக்கன்னிகையால் பெருஞ் செல்வத்தை யடையலாம்" என்றான்.

இரங்:—அடடா! அதெப்படி?

மார்க்க:—அவளுடைய குரலின் இனிமையைப்போல் இதுகாறும் யாரும் கேட்டே யிருக்கமாட்டார்கள்.

இரங்:—அவள் சங்கீதத்தில் இணையற்றவளாகவே யிருக்கட்டும். அதனாலேயே யெப்படிச் செல்வம் வந்து விடும்?

மார்க்க:— என்? கொட்டூர் கோமளவல்லி, பிமிலி பொன்னம்மாள், சென்னூர் சுந்தரவல்லி இவர்களெல்லாம் எப்படி பணக்காரிகளாய்விட்டார்கள்?

இரங்:—“அப்பு! அவள்மிக்க அழகாய்க்கூட இருக்கிறளென்றல்லவா கூறுகிறாய். ஆ! அவள் தாயார் மிக்க ரூபவதி. அவள் வயிற்றில் பிறந்த பெண் மிக்க அழகாகவே யிருப்பாள்” என்று கண்களில் சந்தோஷப் பிரகாசம் தோன்றக் கூறினன்.

அப்பு (அல்லது மார்க்கபந்து):—இரங்கநாதம்! நான் கூறுகிறேன் பார். அவள் மிக்க அழகுடையவளாகவே ஆகப் போகிறாள். நீ யவளை என் வசத்தில் ஒப்பிவித்தது முதல் எள்ளளவு கடுஞ்சொல்லைக்கூட அவள் கேட்டிருக்க மாட்டாள். எப்போதும் அன்போடும் கருணையோடுமே நடத்தப் படுகிறாள். எந்த விஷயத்திலும் எள்ளளவு குறையும் கிடையாது. சங்கீதத்தில் மிக்க கெட்டிக்காரியாக்கி அவள் நாடக மேடையில் பிரக்யாதி யடையும்படிச் செய்கிறேன் பார்.

இரங்க:—அதற்கு நான் உனக்குத் தாராளமாய்ப் பணம் கொடுத்து வருகிறேனல்லவா. ஆ! நான் அவளைப் பார்க்க வேண்டும். பார்த்து ஐந்து வருடங்களாய்விட்டன.

அப்பு:—ஆம். ஆம். அதற்காக நான் ஒன்றும் கூறவில்லை. நீ தப்பு அர்த்தம் செய்து கொண்டாய். நான் கூறவந்தது அவள் எப்போதும் மிக்க பட்சமாகவே நடத்தப் படுகிறாள் என்பதே யன்றி நீ பணம் கொடுக்கவில்லை யென்றெண்ணி யல்ல. அது விஷயத்தில் எனக்குப் பூரண திருப்தியே.

இரங்கநாதன் சற்று நேரம் என்னவோ யோசித்துக்கொண்டிருந்து விட்டுப் பிறகு,

“சரி, ஏதோ அப்பெண்ணை யழைத்துவா அவள் எப்படி யிருக்கிறாள் பார்ப்போம். ஆகாகா! இப்பெண் மட்டும் தாயைப் போல் அழகாயிருப்பாளேல்...” என்றான்.

அப்பு:—என் வாசஸ்தலம் பின்பக்க மிருக்கிறது. அவள் அங்குதானிருப்பாள். வா போவோம்.

உடனே இருவரும் எழுந்து அங்கிருந்த ஒரு கதவைத் திறந்து கொண்டு துப்பறிவோர் கண்களுக்கு மறைந்து விட்டார்கள்.

ஆனந்தலிங் தட்டென் றெழுந்து தேவராஜை நோக்கி, “என்னவோ சங்கதி நடக்கப் போகிற தென்றும், அதில் நமக்குச் சம்பந்தம் இருக்கிற தென்றும் என் மனதிற் படுகிறது. எனக்கு அப்படித் தோன்றினல், அவ்வாறே நடக்கும். இன்று நாம் தற்செயலாய் வரவில்லை. இது கடவுள் ஏற்பாடே” என்று கூறிவிட்டு, அப்பும் இரங்கநாதனும் சென்ற வழியே ஜாக்கிரதையாய்ச் சென்றான். தேவராஜனும் எழுந்து அவன் பின்னல் சென்றான்.

மூடி யிருக்கும் கதவைச் சந்தடி செய்யாமல் திறப்பதிலும், பூனை போல் பதுங்கிச் செல்வதிலும் ஆனந்தலிங் மிக்க சாமர்த்திய முடையவன்.

அவன், அப்பும் இரங்கநாதனும் சென்றவழியேசென்று அங்கிருந்தகதவைத் திறந்தான். அங்கு சுரங்கம் போன்ற நீண்ட ஒரு பாதையும் அதன் கோடியில் மூடியிருந்த ஒரு கதவும் தோன்றின. ஆனந்தவலிங் தானும் அந்த வீட்டில் வசிப்பவன் போலவும் மிக்க பழக்க முடையவன் போலவும் தேவராஜை நோக்கி இந்தக் கதவை மூடிக்கொண்டு வா என்று சமிக்கைசெய்து விட்டுத் தாராளமாய்ச் சுரங்க வழியே சென்முன். தேவராஜனும் சற்று அச்சத்தோடு பின்னாலேயே சென்றுன். சுரங்கத்தின் கோடியில் சென்று இருவரும் நின்றபோது, உள்ளே சற்று தூரத்திலுள்ள அறையிலிருந்து மனிதர் பேசும் சத்தம் கேட்டது.

---

## 2-வது அத்தியாயம்

மார்க்கபந்தும், இரங்கநாதனும் போய்சேர்ந்த அறை 20 அடி நீளமும் 15 அடி அகலமு முடையது. அங்கு இரண்டு மூன்று நாற்காலிகளும், ஒரு மூலையில் ஒரு சோபாவும், ஒரு பியோனு வாத்தியமும், சாளரத்தின் ஓரத்தில் ஒரு கூண்டில் கனரா குருவிகளும் இருந்தன. அந்த அறைக்குச் சற்று தூரத்திலிருந்த ஒரு ஸ்திரீயின் இனியகுரல் அங்கு கேட்டது; மார்க்கபந்து இரங்கநாதனை யொரு ஆசனத்தில் அமரச்செய்து ஸ்திரீயின் குரல்கேட்கும் திக்கை நோக்கிச்சென்று இரண்டொரு நிமிடங்களில் ஒரு அழகிய சிறு பெண்ணைக்கையில் பிடித்துக் கொண்டு இரங்கநாதன் முன்வந்தான்.

அக்கன்னிகை விலையுயர்ந்த உடுப்பணியாமல் சாதாரண உடையே யணிந்திருந்த போதிலும் அது சுத்தமாயும் அவள் தேகத்திற்கு அழகு செய்வதாயு மிருந்தது. அவள் முகத்தில் பூரணசந்திரன்போல் கருணை யொழுகிக்கொண்டிருந்தது.

இரங்கநாதன் முதலில் அவளைக் கண்டதே திடுக்கிட்டுத் துள்ளியெழுந்தான். பிறகு அவள் அழகைக்கண்டு வியப்புற்றுப் பிரமித்து நின்றுன். அவன் இயற்கை வனப்பைக்கண்டு மகிழும் நாகரீக அறிவில்லாத முரட்டு மனிதனே யாயினும் இச்சமயம் அக்கன்னிகையின் வனப்பு அவன் மனதில் உறுத்தியபடியால் அவன் கல்மரமும் மிருதுவாகி விட்டது.

கோமளவல்லி என்ற நாமதேயமுடைய அக்கன்னிகை மிக்க அழகும் நற்குணங்களு முடையவள். அவள் பிறந்தது முதல் தாழ்ந்த ஜனங்களிடத்தில் இருந்தாலும் அற்பபுத்தியும் தாழ்ந்த யோசனைகளும், இழிவான எண்ணங்களும் அவள் மனதில் பிரவேசிக்கவில்லை. நவீனபுரியில் மிக்க தாழ்ந்த கூட்டத்தாரும், முரடர்களும், கள்ளர்களும், போக்கிரிகளும், சூதாடிகளும் நடமாடும் இடங்களிலேயே அவள் வசித்தாலும், அவர்கள் குணங்களில் எள்ளளவேனும் அவள் மனதிற் பற்றவேயில்லை.

மார்க்கபந்து அப்பெண்ணைத் தன் வயிற்றிற் பிறந்த பெண்ணை விட அதிக பட்சத்தோடேயே ஆதரித்து வந்தான். உண்மையிலேயே அவனுக்கும் அவன் மனைவிக்கும் அவள் சொந்த புத்திரிபோலவே வளர்ந்து வந்தாள். மேலுக்கு அவள் இரங்கநாதன் புத்திரியென்று கூறப்படுவது. உண்மையில் அவள் இருவர் புத்திரியுமல்ல.

கோமளவல்லி அறையின் வாயிற்படி யருகில் வந்ததே இரங்கநாதனைக்கண்டு மிரட்சியடைந்து அங்கேயே நின்றாள். மார்க்கபந்து,

"குழந்தாய் வாவா! அன்னியர் யாருமில்லை. இவர் உன் தந்தை. ஐந்து வருடமாய் அவர் உன்னைக் காணவில்லை. இப்போதுன்னைப் பார்க்கவே வந்திருக்கிறார். இங்கேவா!" என்றான்.

அக்கன்னிகை இரண்டடி முன்வைத்து இரங்கநாதனை யுற்றுப்பார்த்து, பிறகு சட்டென்று மிரண்டு பின்னிடைந்து "ஒகோ! இல்லை இல்லை இம்மனிதன் என் தந்தையல்ல, அல்லவேயல்ல, என்தந்தை நான் படுத்துக்கொண் டிருக்கையில் என்னைக் குனிந்து பார்த்திருக்கும் போது நான் அவர் முகத்தைப் பார்த்திருக்கிறேன். இவன் என் தந்தையல்ல" என்றாள்.

அவ் வார்த்தைகளைக்கேட்ட இரங்கநாதன் முகம் வெளுத்து விட்டது. அவன் தன் ஆசனத்தை விட்டெழுந்து,

"குழந்தாய்! வா! நான்றான் உன் தந்தை. நான் இப்போது தடித்து விட்டபடியால் உனக்கு அடையாளம் தெரியவில்லை. சுமார் 5 வருடங்கட்கு முன் இங்கு வந்தபோது உனக்கு ஒரு சவரன் கொடுத்தேனே அது கவன மிருக்கவில்லையா? என்றான்.

(தொடரும்)

ஆறணி-குப்புசாமி முதலியார்.

---

## தபால் வி. பி. கட்டண விகிதம்

இப்போது எல்லாவிதமான வி. பி. பாக்கெட், பார்சல் முதலியவைகளும் ரிஜிஸ்டர் செய்தே அனுப்பப்படவேண்டும் என்று ஒரு துரைத்தனச் சட்டம் பிறந்திருப்பது யாவரும் அறிந்தவிஷயமே. முன்பு சென்னை டிராம்வே கம்பெனியில் வேலை செய்யும் ஆட்கள் சம்பளம் போதாதென்று வேலைநிறுத்தம் செய்தபோது, அக்கம்பெனியார் அவ்வாறே அவர்கள் சம்பள விகிதங்களைக் கொஞ்சம் உயர்த்தினார்கள். ஆனால் உடனே ஜனங்களிடம் வாங்கும் டிராம் சத்தத்தை இரண்டத்தனை யாக்கிவிட்டார்கள். இதனால் அவர்கள் அதிகமாகக் கொடுக்க நேர்ந்த சம்பளத்தொகைக்கு அதிகமாகவே வருமானத்தை யுயர்த்திக்கொண்டார்கள். இது "Rob Peter and pay Paul" (பீடரின் பொருளைக் களவாடிப் பால் என்பவனுக்குத் தானம் செய்) என்ற ஆங்கிலப் பழமொழிபோ லிருக்கிறது.

சமீபகாலத்தில் தபால் இலாகா ஊழியர்கள் தங்கள் சம்பளத்தை யதிகமாக்கும்படி கேட்டார்கள். அதற்கு ஈடுசெய்துகொள்ள இந்த விதி ஏற்படுத்தப் பட்டதோவென்று நாம் கருதவேண்டி யிருக்கிறது. தபால் இலாகாவின் வருமானத்தை யதிகப்படுத்த நேர்ந்தால் அப்படிச் செய்ய வேண்டியதுதான். ஆனால் அப்படிச் செய்யப் பல மார்க்கங்களுள. இப்போது செய்திருக்கும் மார்க்கம் பொது ஜனங்களுக்கு மிக்க நஷ்டத்தையும் கஷ்டத்தையும் உண்டாக்கத் தக்கதாக விருக்கிறது. அரை ரூபா, கால் ரூபா, ஒரு ரூபா முதலிய பெறும்படியான சாமான்களை ஜனங்கள் வி. பி.

மூலமாக அழைப்பித்துக்கொள்ள முடியாமற்போகிறது. ஏனெனில், "சுண்டக்காய் ஒரு பணம், சுமைக்கூலி முக்காற்பணம்" என்பதுபோல் ஆகிறது. வி. பி. திரும்பிவந்தால் நேரிடும் நஷ்டம், அதனால் வரக்கூடிய இலாபத்தைவிட அதிகமாகுமாதலால் வர்த்தகர்கள் சொல்ப விலையுள்ள சாமான்களை வி. பி. யில் அனுப்ப அஞ்சுவார்கள்.

ஒரு தேசத்தின் க்ஷேமத்திற்கு ஜனங்களின் கல்வி யபிவிர்த்தியும் அறிவுப் பிரகாசத்தின் அபிவிர்த்தியுமே காரணம். மேற்கண்ட சட்டம் இதற்குப் பெரிய இடையூறு செய்யும் என்பதில் ஐயமின்றாம். சாதாரணமாய் பத்திரிகைகள், சஞ்சிகைகள் முதலிய இவைகள் வி. பி.யில்தான் பெரும்பாலும் அனுப்பப்பட வேண்டியவைகளாக விருக்கின்றன. ஜனங்களின் இலெளகீக ஆசாரச் சீர்திருத்தம், பாஷாஞான ஆன்மார்த்தஞான அபிவிர்த்தி முதலியவற்றிற்கே பாடுபடும் நமது சஞ்சிகை பல்லாயிரம் பேருக்கு வி. பி. யில் அனுப்பப்படவேண்டி யிருக்கிறது, இதுகாறும் ரூ. 1—1—0 கொடுத்து வாங்கியவர்கள் இனி ரூ. 1—3—0 கொடுக்க வேண்டியிருக்கிறது. வருடாரம்பத்தில் ஏறக்குறைய 13-ஆயிரம் பேருக்கு வி. பி. யில் அனுப்பப்பட வேண்டும். இவற்றில் அனேகம் பல காரணங்களால் திரும்பி வந்து இரண்டாம் முறை யனுப்பப்பட நேரிடுகிறது. இதனால் பத்திராதிபர்களுக்குப் பெரிய நஷ்ட முண்டாகிறது. இவ்வாறு எல்லாபத்திரிகைகளுக்கும் இந்த ஏற்பாடு பெரிய இடையூறு செய்வதாகும்.

இத்தகைய பெருங் கேட்டை விளைவிக்கும் இந்த ஏற்பாட்டைத் துரைத்தனத்தார் கூடிய சீக்கிரத்தில் இரத்து செய்வார்களென்றே யாவராலும் நம்பப்படுகிறது. எப்போதும் ஜனங்களின் பொது நலத்தையே நோக்கமாகக் கொண்டிருக்கும் ஜீவகாருண்யம் பொருந்திய நமது துரைத்தனத்தார் ஐயமின்றி இதை இரத்து செய்வார்களென்றே நாம் பூரணமாய் நம்புகிறோம். பரம்பொருள் அருள்புரியப் பிரார்த்திக்கிறோம்.

ஆனந்தபோதினி.

---

## சந்தாநேயர்களுக்கு அறிவிப்பு

6-வது வருட ஆடிமீ சஞ்சிகையை வி. பி. யில் பெற்றுக்கொண்டோரில் அனேகருக்கு இன்னும் ஆவணி மாதச் சஞ்சிகை கிடைக்க வில்லையென்று தெரிகிறது. இதற்குக் காரணம:—திரும்பி வரும் வி. பி. இரசீது-நாம் அனுப்பியதே-வராமல் அதன் நகல் எழுதப்பட்டு வருகிறது. அந்த நகலில் சந்தா நெம்பர் குறிக்கப் படுவதில்லை. பெயர் முதலியவையும் விளங்கும்படி எழுதப் படுவதில்லை. இத்தகைய நெம்பர் பெயர் அறிய முடியாத இரசீதுகள் நூற்றுக் கணக்காய் நம்மிடம் வந்திருக்கின்றன. ஆதலின் வி. பி. பெற்றுக்கொண்டு ஆவணி சஞ்சிகை யின்னும் கிடைக்கப் பெறாமலிருக்கும் சந்தா நண்பர்கள் தயவுசெய்து தங்கள் நெம்பர், விலாசம், வி. பி. பெற்ற தேதி இவற்றை யுடனே அவசியம் ஒரு கார்டில் எழுதியனுப்ப வேணுமாய்க் கோருகிறோம்.

பத்திராதிபர்.

## ஓர் முக்கிய அறிக்கை

1920-ஞு செப்டம்பர்மூ 1உ முதற்கொண்டு வி. பி.-யில் அனுப்பப்படும் பத்திரிகைகள், பார்ஸல்கள், பாக்கட்டுகள் முதலிய யாவும் ரிஜிஸ்டர் செய்யப்படவேண்டுமென்று துரைத்தனக் கட்டளை பிறந்திருக்கிறது. ஆகையால் இனி சஞ்சிகை வி. பி.-யில் ரூபா 1—2—0-க்குத்தான் அனுப்பப்படும். வாங்கிக்கொள்வோர் இந்த ரூபா 1—2—0 உடன் வி.பி. கமிஷன் 1-அணு சேர்த்து ரூபா 1—3—0 கட்டிப் பெற்றுக்கொள்ளவேண்டும். முன் பணம் அனுப்பிவிட்டால் ரூபா 1—1—0 தான் செலவென்பது கவனிக்கத்தக்கது. இவ்வாறே சொல்ப கிரையமுள்ள எப்பொருளையும் வி. பி. யில் வரவழைப்போருக்கு 2-அணு அதிக செலவேற்படுகிறது. வி. பி. வாபீசாகிவிட்டால் அதை யனுப்புவோர்க்கு 1-அணுவிற்குப் பதில் 3-அணுவும் தபால் சார்ஜும் வீண் நஷ்டமாதலால் சொல்ப கிரையமுள்ளவற்றை வி. பி. யில் அனுப்ப வர்த்தகர்கள் பின் வாங்குவார்கள் என்பது உணரத்தக்கது.

பத்திராதிபர்.

## பொது சமாசாரங்கள்

வேல்ஸ் இளவரசர் விஜயம்.—அடுத்த குளிர்காலத்தில் நமது மகிமை தங்கிய வேல்ஸ் இளவரசர் சென்னைக்கு விஜயஞ்செய்வாரென்றிருந்த எண்ணம் நிறைவேறாதென அறிகிறோம். ஏற்கெனவே கானடா, ஆஸ்திரேலியா முதலிய தேசங்களுக்கு விஜயஞ்செய்து, தேக அலுப்புற்றமையால், அதன் தொடர்ச்சியாகவே இந் நாட்டினுக்கும் வந்து, ஆங்காங்கு நடைபெறும் வரவேற்பு வைபவங்களுக்கு சமுகந்தந்து, அவைசம்பந்தமாய் நிகழும் அலுவல்களைக் கவனிக்குங்கால், அவருடைய தேகத்துக்கு ஒரு சமயம் அசௌக்கியம் நேரிடலாமென டாக்டர்கள் அபிப்பிராயப் படுவதால் நமது இளவரசர் இப்போது இங்குவருவதை நிறுத்தித் தம்மூருக்குச் சென்றுவிட்டார். இனி அடுத்தவருஷம் குளிர்காலத்துக்கு இந்நாட்டுக்கு வருவாரெனச் சொல்லப்படுகிறது.

கன்னாட்டுக் கோமகன்.—வேல்ஸ் இளவரசரால் திறக்கப்படவிருந்த புதிய இந்திய சட்ட சபை நமது சக்ரவர்த்தியவர்களின் சிறிய தந்தையாகிய மேன்மைதங்கிய கன்னாட்டுக் கோமகனால் திறக்கப்படுமென உத்தியோக முறையில் அறிவிக்கப்படுகிறது.

இந்திய கவர்னர்:—வங்காள வாசியாகிய லார்டு சின்ஹ பிரபு அவர்கள் தமது ஜனன நாடாகிய பீஹார், ஒரிஸா மாகாணங்களுக்குக் கவர்னராக நியமிக்கப்பட்டிருக்கிறார். இந்தியரில் கவர்னராய் நியமனம்பெற்றவர் இவர் ஒருவர்தான். இவர்தான் முதல் முதல் வங்காளத்தில் தலைமை நியாயாதிபதி ஸ்தானத்தையும்; இந்தியா கவர்ண்மெண்ட் நிர்வாகசபை அங்கத்தினர் ஸ்தானத்தையும், இங்கிலாந்தில் உதவி இந்தியா மந்திரி ஸ்தானத்தையும், லார்ட் சபையில் லார்டு அல்லது "பிரபு" என்னும் பட்டத்தையும் வகிக்கும் கௌரவத்தையும் பெற்றவர். இவர் மிக்க புத்திமானும், ஆழ்ந்தயோசனை யுள்ளவராயு மிருப்பதினால்தான், இவருக்கு இத்தகைய உன்னதபதவிகள் அளிக்கப்பட்டன. இச்சங்கதியைக் கேள்விப்படும் இந்தியர் ஒவ்வொருவரும் சந்தோஷமும் பெருமையும் அடைவாரென்பதிற் சந்தேகமில்லை. இவர் அடுத்த நவம்பர்மீ த்தில் தமது கவர்னர் அலுவலை ஒப்புக்கொள்ளுவாரெனத் தெரிகிறது.

# “ஆனந்தபோதினி” பஞ்சாங்கம்

## இரௌத்திரிஸ்ரீ ஐப்பசிமீ—சாலிவாகனம்1843-கலியுகாதி 5022.

## பசலி 1329-30—கோல்லம் 1095-96 - ஹிஜரி-1338-39

## இங்கிலீஷ் 1920ஸ்ரீ அக்டோபர்மீ—நவம்பர்மீ

| ஐப்பசிமீ | அக்டோபர்மீ | வாரம் | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | ஞா | ப-8-52 | கே-6-47 | ம-6 அ | கெர்ப்பாதானம் |
| 2 | 18 | தி | சஷ் 14-29 | மூல-12-59 | சி-21உ | வியாபாரம், பிரயாணம் |
| 3 | 19 | செ | சப்-19-6 | பூரா-19-30 | சி-12ம | கட்டடயந்திரவேலை |
| 4 | 20 | பு | அ-24-16 | உத்-25-56 | அ-25சி | பும்ஸவனம் சீமந்தம் |
| 5 | 21 | வி | நவ-28-50 | திரு-29-47 | சி-60 | துர்க்கா பூஜை |
| 6 | 22 | வெ | தச-31-9 | அவி-36-51 | சித்-60 | கரிநாள் |
| 7 | 23 | ச | ஏ-33-59 | சத-40-52 | அ-40ம | பிரயாணம் வியாபாரம் |
| 8 | 24 | ஞா | து-36-48 | பூட்-43-39 | சி அ-60 | பிரயாணம் |
| 9 | 25 | தி | தி-37-5 | உட்-45-14 | சித்-60 | விவாகநிச்சயம் |
| 10 | 26 | செ | ச-35-47 | ரே-45-27 | சி-அ-மி | வாஸ்து போஜனகாலம் |
| 11 | 27 | பு | ○-33-26 | அசு-44-36 | ம-44சி | அன்னாபிஷேகம் |
| 12 | 28 | வி | பிர-30-6 | பர-42-46 | சி-42ம | சுபகாரியங்கள் |
| 13 | 29 | வெ | துவி25-49 | *கிரு-39-59 | சி-39ம | கிருத்திகை சுபகாரியம் |
| 14 | 30 | ச | தி-20-53 | ரோ-36-39 | அ-சி-60 | பிரயாணம் வியாபாரம் |
| 15 | 31 | ஞா | ச-15-25 | மிரு-32-55 | சித்-60 | சீமந்தம் பும்ஸவனம் |
| 16 | 1 | தி | ப-9-29 | திரு-28-22 | சி-28-அ | கெர்பாதானம் |
| 17 | 2 | செ | சஷ்3-31<br>சப்-55-2 | புன-24-23 | சித்-60 | பிரயாணம் |
| 18 | 3 | பு | அஷ் 51-52 | பூச-20-23 | சித்-60 | நாற்றுநட யந்திரவேலை |
| 19 | 4 | வி | நவ-46-52 | ஆயி-14-46 | சி-14-அ | பிரயாணம் |
| 20 | 5 | வெ | தச-42-10 | மக-13-32 | ம-13-சி | கரிநாள் |
| 21 | 6 | சனி | ஏ-38-10 | பூர-11-9 | சி-12-உ | கிழங்கு நட |
| 22 | 7 | ஞா | து-35-5 | உத்-9-34 | அமி-60 | கெர்பாதானம் விவசாயம் |
| 23 | 8 | தி | தி-34-8 | அஸ்-9-3 | சி-9-பி | |
| 24 | 9 | செ | ச-33-29 | சித்-9-42 | சித்-60 | |
| 25 | 10 | பு | அ●34-43 | சுவா-11-36 | சித்-60 | |
| 26 | 11 | வி | பிர-36-56 | விசா-14-46 | சித்-60 | |
| 27 | 12 | வெ | து-40-20 | அனு-19-6 | சித்-19-ம | |
| 28 | 13 | சனி | தி-44-44 | கேட்-24-29 | சித்-60 | |
| 29 | 14 | ஞா | சது-49-59 | மூல-30-24 | அ-30-சி | |
| 30 | 15 | திங் | ப-54-15 | பூரா-36-55 | உத்-மர | |

1920ஸ்ரீ நவம்பர்மீ

| | | | |
|---|---|---|---|
| | சே | | |
| | 3-வி-சுக்<br>6-வி-புத<br>23-து வ-பு<br>23கன் சனி | | குரு சனி |
| செ | சுக் புத | ராகு சூரி | |

Printed & Published by N. Munisawmi Mudaliar at the “Ananda Bodhini” Press, 15, Venkatesa Maistry Street, Madras.